திருமலை-திருப்பதி

# யாத்திரா தரிசனமும்

## (ஸ்தலபுராணம்)



விலை: 75 ந. பை.

1964

# திருமலை-திருப்பதி
# யாத்திரா தரிசனமும்
## [ஸ்தலபுராணம்]






பப்ளிஷர்ஸ்:

வேங்கடேஸ்வரா புக் டிபோ, திருமலை.

சித்தூர் ஜில்லா, ஆந்திர பிரதேஷ்.



1964

# முகவுரை

இந்த புத்தகத்தில் ஸ்ரீவேங்கடாசல மஹாத்மிய மும் யாத்திரை வரும் பக்தர்கள் முக்கியமாக தெரிந்துகொள்ளவேண்டிய அநேக விஷயங்களும் இந்த க்ஷேத்திரத்தில் எங்கெந்த தீர்த்தங்களில் முக்யமாக ஸ்நானம் செய்ய வேண்டுமோ மற்றும், பிரார்த்தனைகளை செலுத்துவது எங்கெந்த முறையில் என்பதை தெரிவிப்பதுடன் இவ்விடம் ஸ்ரீ திருவேங்கடத்தானின் ஆலயம் யாரால் கட்டப்பட்டது, எக்காலத்தில் எப்படி பரிபாலித்ததும், யாத்திரை வரும் பக்தர்கள் தங்குவதற்கு வேண்டிய சௌகர்யங்களும், தரகர்களுடைய மோசத்திற்குட்படமலிருக்க வேண்டிய விஷயங்கள் அடங்கியுள்ளன. யாத்திரை வரும் பக்தர்கள் ஒவ்வொருவரும் இதை படித்து இவ்விடம் ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு எந்த முறையில் பூஜை வகைராக்கள் நடக்கிறதென்பதை தெரிந்துக் கொண்டு, அவர் அனுக்கிரஹத்தை பெறுவீர்களாக.

இப்படிக்கு
பதிப்பாளர்.



## அட்டவணை

## திருமலை-திருப்பதி

# யாத்திரா தரிசனமும்

## (ஸ்தலபுராணமும்)

ஸகலகுண ஸம்பன்னர்களான ஸௌனகாதி முனீந்திரர்கள் அவரவர்கள் நித்யானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு மந்ஹாஸமான வதனங்களுடையவர்களாய் பூலோகத்தில் 108 திருப்பதிகள் உள்ளன. அவற்றில் ஸ்வயம்வெக்தமான எட்டுதிருப்பதிகளில பிரத்யக்ஷ வைகுண்டமென்று பிரசித்தி பெற்று பக்தர்களுக்கு அவரவர்கள் இஷ்டார்த்தமான பலன்களைக் கொடுத்துவரும் வேங்கடாசல மகாத்மியத்தைக் கர்ணம்ருதமாய் கேட்டு ஆனந்தப்பட கோரினவர்களாய் பௌராணிகோத்தமரான சூதமுனீந்திரரைப் பார்த்துச் சொல்லுகிறார்.

மஹாத்மா! பூலோகத்தில் உள்ள நூற்றி எட்டு திருப்பதிகளில் மோக்ஷ பிரதமான வேங்கடாசல மஹாத்மியத்தைக் கேட்டு ஆனந்திக்க பிரார்த்திக்கின்றோம். என்று வினவ, சூத முனீந்திரர் வேங்கடாசல மஹாத்மியத்தைச் சொல்லத்தொடங்கினர்.

ஸ்ரீ மஹாவிஷ்ணு பாற்கடலில் சயனித்திருக்க எம்பெருமானுடையநாபிகமலத்தினின்றுநான்முகன் அவதரித்து கடவுளை பிரார்த்தித்தார். அப்போது மஹாவிஷ்ணு பிரத்யக்ஷ்க்ஷமாய் சிருஷ்டியை ஆரம்பிக்கும்படி ஆக்ஞாபித்தார். அப்போது பிரம்மா ஸமஸ்த பிரபஞ்சத்தையும் சராசர பூதங்களையும்.

தேவர்களையும், சர்வ பிராணிகோடிகளையும் சிருஷ்டித்தார். அந்த லோகங்களில் ஸமஸ்த பிராணிகோடிகளையும் மஹாவிஷ்ணு பரிபாலித்து வந்தார்.

இப்படி நாலாயிரம் சதுர்யுகங்கள் செல்ல நான்முகனுக்கு ஒரு பகல் பூர்த்தியாய் பிரளய காலம் வருகலாயிற்று. பிரம்மதேவர் சிருஷ்டியை நிறுத்தி நித்திரை செய்தார்.

ஒரு காலத்தில் ஸனகஸனந்தனாதிகள் வைகுண்டத்தில் உள்ள பரந்தாமனை சேவிக்க எழுந்தருள துவாரபாலர்கள் அவர்களை தடை செய்ததினால் அவர்களுக்கு ஸனகஸனந்தனாதிகளால் சாபம் உண்டாயிற்று. விஷ்ணு இந்த விஷயத்தை தெரிந்துக்கொண்டு ஸனகஸனந்தனாதிகளுக்கு சேவை கொடுத்து துவரபாலகர்களுடைய சாபம் நீங்கும்படி அவர்களைக் கேட்டார். அப்போது அவர்கள் துவாரபாலகர்களைப் பார்த்து மூன்று ஜன்மங்களில் விரோதிகளாய்யிருந்து ஹரியினுடைய திருவடிகளை அடைய அனுக்ரஹிக்க அவர்கள் ஹிரண்யாக்ஷ ஹிரண்யகஸ்யபர்களாய் பிறந்தனர் பிரம்மா நித்திரை செய்யும்பேது ஹிரண்யாக்ஷன் பூமியைப் பாய்போல் சுற்றி பாதாளத்திற்கு கொண்டு போய் மறைத்து வைத்திருந்தான். சில காலத்திற்கு பிரம்மா நித்திரையிலிருந்து எழுந்தவராய் பூமியைக் காணுமல் கலவரமுற்றவராய் ஏதுவும் தோன்ருமல் ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் பிரார்தித்தார். பகவான் உடனே பிரத்யக்ஷமாய் பிரம்மாவை தேற்றி ஸ்வேதவராஹரூபம் எடுத்து பாதாளத்திற்கு சென்று ஹிரண்யாக்ஷனை கொன்று பூமியை யதா

ஸ்தானத்தில் வைத்து சிருஷ்டியை பிராரம்பிக்க ஆக்ஞாபித்தார்.

தேவர்கள் வராஹரூபமாயுள்ள ஹரியை அநேக விதங்களில் ஸ்தோத்திரம் செய்து துஷ்டனை ஹிரண்யாக்ஷக்ஷனை சம்ஹரிக்க எடுத்த இந்த பயங்கரமான ரூபத்தை மறைக்க வேண்டுமென்று பிரார்தித்து வராஹமூர்த்தியின்மேல் புஷ்பமாரி பொழிந்தார்கள். வராஹமூர்த்தியான ஹரி சாந்தி அடைந்தார். அப்போது பிரம்மா ஹரியைப்பார்த்து சில காலம் வராஹ ரூபத்தில் பக்தர்களுக்கு மோக்ஷம் கொடுத்து காப்பாற்ற வேனுமாய் பிரார்த்தித்தார். அதன்படி அங்கீகரித்து பூலோகத்தில் சில காலம் எழுந்தருளியிருக்க நிச்சயித்து கருடனை அனுப்பி வைகுண்டத்தில் உள்ள கிரீடாத்திரியை கொண்டு வரச்சொல்லி அதில் வாசம் செய்து பக்தாதிகளுக்கு தரிசனம் கொடுத்து பக்தர்களுடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றிக்கொண்டு சில காலத்திற்குப் பிறகு வராஹரூபமான பகவான் வைகுண்டத்திலுள்ள நித்ய முக்தர்களைப் பார்க்கச் சென்றார்.

## பிருகுரிஷி திருமூர்த்திகளை பரீக்ஷித்தல்

மகாவிஷ்ணு வைகுண்டத்திற்கு சென்ற விருத்தாந்தம் திருலோக சஞ்சாரியான நாரதமுனிவர் தெரிந்துக் கொண்டு தந்தையான பிரம்மா விடம் சென்று மகாவிஷ்ணு வராஹரூபத்தை முடித்துக் கொண்டு வைகுண்டத்தில் இருப்பதாய் சொன்னார். இவ்வார்த்தையைக் கேட்டு பிரம்மா நாரதரை பார்த்து சொல்லுகிறார்.

விஷ்ணுவை பூலோகத்தில் வசிக்கச் செய்து பக்தர்களைக் காக்கும் உபாயத்தைச் செய்யும்படி சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டதும் நாரதர் ஸத்தியலோகம் விட்டு பகவானை தியானம் செய்துக் கொண்டு ஜான்ஹவீநதி தீரம் சேர்ந்து அவ்விடம் கிரதுக்கள் (யாகத்தை) செய்துவந்த கஸ்யபாதி முனிவர்களைப் பார்த்து நீங்கள் செய்யும் யாக பலத்தை யாருக்கு கொடுப்பதாய் நினைத்தீர்கள் என்று கேட்க அவர்கள் யாதொரு விடையும் கூற முடியாமல் இருக்க, அப்போது நாரதர் கஸ்யபாதி முனிவர்களைப் பார்த்து திருமூர்த்திகளில் ஸத்வ குணஸம்பன்னரானவருக்கு யக்ஞபலத்தை கொடுக்கும்படி சொல்ல ஸ்ரீமன் நாராயணனை தியானித்துக் கொண்டு சென்றார். கஸ்யபாதி முனீந்திரர்கள் திருமூர்த்திகளில் ஸத்வகுண ஸம்பன்னர் யாரோ பரீக்ஷிக்க பிருகுமுனிவரை அனுப்ப, பிருகு உடனே ஸத்யலோகம் சென்று நான்முகனை பரீக்ஷித்து கைலாஸம் சென்று ஈஸ்வரனை பரீக்ஷித்து கடைசியில் வைகுண்டம் சென்று பிராட்டியான லக்ஷ்மீ ஸமேதராய் சேஷஸயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவை தன் பாதத்தால் வக்ஷஸ்தலத்தில் உதைக்க ஹரி உடனே எழுந்து பிருகுவினுடைய பாதங்களை ஒத்திக்கொண்டு தங்களுடைய வருகையை எதிர்பாராமல் ஸயனித்திருந்ததற்கு மன்னிக்கும்படி வேண்டினார்.

உடனே பிருகு விஷ்ணுதேவனுக்கு ஸாஷ்டாங்க தண்டபிரணாமங்கள் செய்து அநேக முறைப்படி துதித்து சொல்லுகிறார். ஜன்ஹவிநதி தீரத்தில் கிருதுக்கள் செய்துவரும் கஸ்யபாதி முனிந்திரர்

களை நாரதர் பார்த்து நீங்கள் செய்துவரும் யாக பலன் யாருக்கு கொடுப்பீர்கள் என்று கேட்க அவர் கள் ஒன்றும் கூறமுடியாமல் இருக்க அப்போது நாரதர் அம்முனிவர்களைப் பார்த்து திருமூர்த்தி களில் ஸத்வகுண ஸம்பன்னரானவர்களுக்கு யாக பலனை சமர்ப்பிக்கும்படி சொல்லிப் புறப்பட்டுச் சென்றார்.

உடனே கஸ்யபாதிமுனிவர்கள் திருமூர்த்தி களில் ஸத்வகுணஸம்பன்னர் யாரோ தெரிந்துவர என்னை அனுப்பிவைத்தனர். நான் ஸத்யலோகம் சென்று பிரம்மனையும், கைலாஸம் சென்று ஈஸ்வரனை யும் பரீக்ஷித்துவிபலனாய் வைகுண்டம்வந்து உங்களை பரீக்ஷித்தால் நீங்கள்தான் ஸத்வகுணஸம்பன்னராக தெரிந்துக்கொண்டேன். ஆனதால் நான் ஒரு குற்ற மும் செய்யவில்லை என்று சொல்ல பகவான் பிருகு ரிஷியை ஆலிங்கனம் செய்துக் கொண்டு ஆசீர்வ தித்து அனுப்பிவிட்டார். பிருகு பரமானந்த மடைந்து ஜான்ஹவீநதி தீரம் சேர்ந்து கஸ்யபாதி முனிவர்களுக்கு இவ்வார்த்தையைசொல்லஅவர்கள் சந்தோஷ முற்றவர்களாய் யாகபலனை ஸ்ரீமஹா விஷ்ணுவுக்கு அர்ப்பித்து சந்துஷ்டரானார்கள்.

## பிராட்டிலக்ஷ்மி பகவான்மேல் கோபம் கொண்டு கொளளாபுரம் சேருதல்

வைகுண்டத்தில் மகாவிஷ்ணுவை பரீக்ஷித்ததில் பிருகுரிஷி செய்தசஅபாரதத்தை சகிக்காமல்வக்ஷக்ஷ ஸ்தலத்தில் வசிக்கும் பிராட்டி லக்ஷ்மி தனக்கு நேர்ந்த அவமானத்தை பொருக்காமல் தன் கணவர் மீது கோபித்து வைகுண்டத்தை விட்டு கரவீரபுரம்

விஷ்ணுவை பூலோகத்தில் வசிக்கச் செய்து பக்தர்களைக் காக்கும் உபாயத்தைச் செய்யும்படி சொன்னார். அவ்வார்த்தைகளைக் கேட்டதும் நாரதர் ஸத்தியலோகம் விட்டு பகவானை தியானம் செய்துக் கொண்டு ஜான்ஹவீநதி தீரம் சேர்ந்து அவ்விடம் கிரதுக்கள் (யாகத்தை) செய்துவந்த கஸ்யபாதி முனிவர்களைப் பார்த்து நீங்கள் செய்யும் யாக பலத்தை யாருக்கு கொடுப்பதாய் நினைத்தீர்கள் என்று கேட்க அவர்கள் யாதொரு விடையும் கூற முடியாமல் இருக்க, அப்போது நாரதர் கஸ்யபாதி முனிவர்களைப் பார்த்து திருமூர்த்திகளில் ஸத்வ குணஸம்பன்னரானவருக்கு யக்ஞபலத்தை கொடுக்கும்படி சொல்ல ஸ்ரீமன் நாராயணனை தியானித்துக் கொண்டு சென்றார். கஸ்யபாதி முனீந்திரர்கள் திருமூர்த்திகளில் ஸத்வகுண ஸம்பன்னர் யாரோ பரீக்ஷிக்க பிருகுமுனிவரை அனுப்ப, பிருகு உடனே ஸத்யலோகம் சென்று நான்முகனை பரீக்ஷித்து கைலாஸம் சென்று ஈஸ்வரனை பரீக்ஷித்து கடைசியில் வைகுண்டம் சென்று பிராட்டியான லக்ஷ்மீ ஸமேதராய் சேஷஸயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவை தன் பாதத்தால் வக்ஷஸ்தலத்தில் உதைக்க ஹரி உடனே எழுந்து பிருகுவினுடைய பாதங்களை ஒத்திக்கொண்டு தங்களுடைய வருகையை எதிர்பாராமல் ஸயனித்திருந்ததற்கு மன்னிக்கும்படி வேண்டினார்.

உடனே பிருகு விஷ்ணுதேவனுக்கு ஸாஷ்டாங்க தண்டபிரணாமங்கள் செய்து அநேக முறைப்படி துதித்து சொல்லுகிறார். ஜன்ஹவிநதி தீரத்தில் கிருதுக்கள் செய்துவரும் கஸ்யபாதி முனிந்திரர்

களை நாரதர் பார்த்து நீங்கள் செய்துவரும் யாக பலன் யாருக்கு கொடுப்பீர்கள் என்று கேட்க அவர்கள் ஒன்றும் கூறமுடியாமல் இருக்க அப்போது நாரதர் அம்முனிவர்களைப் பார்த்து திருமூர்த்திகளில் ஸத்வகுண ஸம்பன்னரானவர்களுக்கு யாக பலனை சமர்ப்பிக்கும்படி சொல்லிப் புறப்பட்டுச் சென்றார்.

உடனே கஸ்யபாதிமுனிவர்கள் திருமூர்த்திகளில் ஸத்வகுணஸம்பன்னர் யாரோ தெரிந்துவர என்னை அனுப்பிவைத்தனர். நான் ஸத்யலோகம் சென்று பிரம்மனையும், கைலாஸம் சென்று ஈஸ்வரனையும் பரீக்ஷித்துவிபலனாய் வைகுண்டம்வந்து உங்களை பரீக்ஷித்தால் நீங்கள்தான் ஸத்வகுணஸம்பன்னராக தெரிந்துக்கொண்டேன். ஆனதால் நான் ஒரு குற்றமும் செய்யவில்லை என்று சொல்ல பகவான் பிருகு ரிஷியை ஆலிங்கனம் செய்துக் கொண்டு ஆசீர்வதித்து அனுப்பிவிட்டார். பிருகு பரமானந்தமடைந்து ஜான்ஹவீநதி தீரம் சேர்ந்து கஸ்யபாதி முனிவர்களுக்கு இவ்வார்த்தையைசொல்லஅவர்கள் சந்தோஷ முற்றவர்களாய் யாகபலனை ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு அர்ப்பித்து சந்துஷ்டரானார்கள்.

## பிராட்டிலக்ஷ்மி பகவான்மேல் கோபம் கொண்டு கொல்லாபுரம் சேருதல்

வைகுண்டத்தில் மகாவிஷ்ணுவை பரீக்ஷித்ததில் பிருகுரிஷி செய்தசஅபாரதத்தை சகிக்காமல்வக்ஷக்ஷஸ்தலத்தில் வசிக்கும் பிராட்டி லக்ஷ்மி தனக்கு நேர்ந்த அவமானத்தை பொருக்காமல் தன் கணவர் மீது கோபித்து வைகுண்டத்தை விட்டு கரவீரபுரம்

என்கிற (கொள்ளாபுரம்) சேர்ந்தகால் பிறகு மகாவிஷ்ணு அவள் தன்னைவிட்டு சென்றதை நினைத்து மனோவியாகூலத்துடன் வைகுண்டத்தைவிட்டு ஏகாங்கியாய் அரண்யங்களில் திரிந்துக்கொண்டு கடைசியில் ஆதிவராஹ க்ஷேத்திரத்தை அடைந்து ஒரு புற்றில் வசித்துவந்தார்.

புற்றில் வசித்துவரும் விஷ்ணுவை பிரம்மா திருப்தி செய்ய எண்ணியவராய் கைலாஸம் சென்று மகாவிஷ்ணு புற்றில் வசிப்பதை ஈஸ்வரனுக்கு அறிவித்து எப்படியாவது பகவானுக்கு திருப்தி செய்ய பிரார்த்தித்தார். உடனே ஈஸ்வரன் பிரம்மாவுடன் சேர்ந்து கொல்லாபுரத்திலுள்ள பிராட்டி இடத்திற்குச் சென்று இந்த விஷயத்தை சொல்லி பகவானை திருப்தி செய்ய உதவி செய்ய வேணுமென்று பிரார்த்தித்தார்கள். பிராட்டி பிரம்மாவையும், ஈஸ்வரனையும் பார்த்து தன்னலான உதவி செய்வதாய் வாக்களித்தாள். அந்த வார்த்தைகளை கேட்டு இப்படி சொன்னார்கள். நாங்கள் இருவரும் பசு, கன்றுகளாக மாறுகிறோம். தாங்கள் இடைச்சியாய் அவதரித்து இந்த கன்றுகளை ஓட்டிக்கொண்டு சோழ இராஜ்ஜியத்தை பரிபாலனம் செய்துக்கொண்டு சந்திரகிரியில் வாசம்செய்துக்கொண்டிருக்கின்ற சோழஅரசனுக்கு விக்கிரயம் செய்யவேண்டும் என்று சொல்லி, அவர்கள் பசு, கன்றுகள் ரூபமெடுத்து நின்றார்கள். உடனே பிராட்டியானலக்ஷ்மீ தேவி இடைச்சிரூபமெடுத்து பசு, கன்றுகளை ஓட்டிக்கொண்டு சோழ அரசனுடைய சபா மண்டபத்தில் புகுந்து பசு, கன்று இவை இரண்டையும் அவனுக்கு விக்கிரயம் செய்து தன் வாசஸ்தானமான கொள்ளா-

புரம் சேர்ந்தாள். சோழராஜன் அவைகளை பார்த்து மிகவும் சந்தோஷங் கொண்டு தன் பசுமாடுகளை மேய்க்கும் இடையனுக்கு இந்தபசு,கன்று இரண்டையும் தனக்கு இருக்கிற மாட்டுமந்தைகளுடன் சேர்க்க கட்டளையிட்டான். அந்த பசுவும் கன்றும் மாட்டு மந்தைகளில் சேர்ந்து தினந்தோறும் சேஷாத்திரி சேர்ந்து அவ்விடம் புற்றினில் உள்ள ஸ்ரீனிவாசனுக்கு பால் கொடுத்துவந்தது இப்படி யிருக்க சில காலத்திற்கு சோழராஜன் மனைவி பசுவிடம் பால் இல்லாமல் போனதால் இது என்ன ஆச்சரியம் என்று பார்த்து கோபாலகனை தண்டித்தாள். கோபாலகன் இந்த விஷயத்தை தெரிந்துக்கொள்ள மறு தினம் காலை பசுக்களை மேய்க்க கோடாலியை பூண்டு, பசுக்களின் மத்தியில் அந்தபசுவின் பின் புறப்பட்டான். அந்த பசு சிலதூரம் சென்றதும் பசுக்களை விட்டு புற்றின் அருகில் சென்று புற்றினில் உள்ள பகவானுக்கு பால்கொடுத்துவரும் சமயத்தில் இதை கண்ட பசுபாலகன் அதிக கோபத்துடன் தன் கையில் உள்ள கோடாலியால் பசுவை அடிக்கச் சென்றான். தயாஸமுத்திரனை பகவான் பசுவை ரக்ஷிக்க புற்றிலிருந்து தன் தலையை எடுக்க, பசுபாலகன் பசுவை அடித்த கோடாலியின் அடி பகவானின் தலையில்பட ரக்த பிரவாஹமாயிற்று. பசுபாலகன் இதைப் பார்த்து மூர்ச்சையானான் உடனே பசு ரக்த கறைகளுடன் சோழராஜன் அரண்மனை அடைந்து துக்கிற்றது சோழராஜன் அப்பசுவை பார்த்து ஆச்சர்ய மடைந்தவராய், பசுவுடன் சேஷாசலம் சென்று புற்றினிடம் வீழ்ந்திருந்த கோபாலகனையும், புற்றிலிருந்து வரும் ரக்த பிரவாஹத்தையும் பார்த்து

ஒன்றும் தோன்ருமல் நின்றுக்கொண்டிருந்தான். பகவான் புற்றிலிருந்து இராஜனைப் பார்த்து உன் சேவகனுல் என் தலையை வெட்டப்பார்த்தாய் ஜனங்கள் செய்யும் பாபங்கள் ஜனங்களை பரிபாலிப்பவன் அனுபவிக்க வேண்டியதால் நீ பிசாசரூபம் எடுபபாயாக! என்று சபித்தார். உடனே சோழராஜன் பிசாசரூபத்தை அடைந்து பகவானை அநேக விதங்களால் தோத்திரம் செய்து நிரபராதியான என்னை இப்படி சபித்தால் என்னை காப்பாற்றுபவர் யார்? என்று கேட்க தயாஸ்வபாவமுள்ள பரந்தாமன் இராஜனைப் பார்த்து நீ இந்த பிசாசரூபத்தை சில காலம் அனுபவித்து இங்கு வசித்து இந்தசரீரத்தை விட்டு தொண்டமண்டலத்தில் ஆகாசராஜனுய் பிறந்து உன் புத்திரிகயையெனக்கு கன்னியாதானம் செய்வித்து கிருதார்த்தனுவக்கடவாய் என்று சொல்லி சாபத்தை திருத்த சோழராஜன் பிசாசரூபத்துடன் சென்ருன்.

## ஸ்ரீனிவாசன் வேட்டையாட செல்லுதல்

ஸ்ரீனிவாசன் தனக்கு ஏற்பட்ட காயத்துடன் புற்றில் வசித்துவரும் சமயத்தில் ஆதிவராஹமூர்த்திக்கு சேவை செய்துவந்த வகுளமாலிகாதேவி ஸ்ரீனிவாசனை சந்தித்து அவருக்கு ஏற்பட்ட காயத்தை போக்கி தன் மகனைப்போல் காப்பாற்றி வந்தாள். இப்படி சில காலத்திற்கு பிறகு ஒருநாள் ஸ்ரீனிவாசன் வேட்டையாட வேங்கடாத்ரியை சுற்றி உள்ள காட்டிற்கு சென்ருர். அவ்விடம் ஓர் மதயானையைப் பார்த்து அதை துரத்திச் சென்று சுமார் இரண்டு யோஜனை தூரத்திலுள்ள ஸதாசிவகோனை

என்கிற அகஸ்தியாஸ்ரமத்திற்கு சமீபத்திலுள்ள ஆகாசராஜனுடைய நந்தவனத்தில் பிரவேசித்தார். அப்போது அவ்விடம் புஷ்பங்கள் கோய்த்து வந்த ஆகாசராஜனுடைய புத்திரிகையான பத்மாவதியை சந்தித்தார். உடனே ஸ்ரீனிவாசன் மதயானையை மறந்து பத்மாவதியின் சௌந்தர்யத்தைப் பார்த்து மோகம் கொண்டு தன்னை விவாஹம் செய்துக் கொள்ளும்படி கேடடார். அதற்கு அவள் சம்மதிக்காமல் வேடன் உருவத்திலுள்ள ஸ்ரீனிவாசன் மேல் கற்கலை வீசினுள். அந்த கல்லடியை தப்பித்துக் கொண்டு சேஷாத்ரியை அடைந்துஅவ்விடம் சிந்தையுள்ளவருய் புற்றில் படுத்துக்கொண்டார். பிறகு வகுளமாலிகாதேவி ஸ்ரீனிவாசனை சந்தித்து நடந்த விருத்தாந்தத்தை அறிந்துக் கொண்டு எப்படியாவது பத்மாவதியை விவாஹம் செய்து வைப்பதாய்ச் சொல்லி சமாதானப்படுத்தி ஆகாசராஜன் அரன்மனைக்குப் புறப்படாள்.

பத்மாவதி ஸ்ரீனிவாசன்மேல் கல்வீசிய பிறகு சஞ்சலமான மனதுடன் மனோவியாதி யுற்றவளாயிருக்க ஸ்ரீனிவாசன் குறத்தி வேடம் பூண்டு ஆகாசராஜன் மனைவியாவ தரணிதேவியிடம் சென்று நந்தவனத்தில் நடந்த விருத்தாந்தத்தை தெரிவித்து பத்மாவதியை ஸ்ரீனிவாசனுக்கு கொடுத்து கல்யாணம் செய்வித்தால் இந்த மனோவியாதி நீங்குமென்று இல்லாவிட்டால் ஜீவித்திருப்பதே கஷ்டம் என்றும் கூறி சேஷாத்ரி சேர்ந்தார். இந்த குறத்தி சொன்ன வார்த்தைகளைக் கேட்டு தரணீதேவி ஆகாசராஜனை பார்த்து பத்மாவதியை ஸ்ரீனிவாசனுக்கு கொடுத்து

விவாஹம் செய்து இந்த விபத்திலிருந்து காப்பாற்ற கோரினள். அப்போது வகுளமாலிகாதேவி தரணீ தேவியிடம் வந்து ஸ்ரீனிவாசனுக்கு மனுபாவத்தை தெரிவித்து, ஆகாசராஜனிடம் சொல்லி பத்மாவதியை ஸ்ரீனிவாசனுக்குக் கொடுத்து விவாஹம் செய்வதாய் வாக்தானம் பெற்று சேஷாத்ரி சேர்ந்து இச்சுபச் செய்தியை ஸ்ரீனிவாசனுக்கு தெரிவித்தாள்.

## ஸ்ரீனிவாச கல்யாணம்

இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் ஸ்ரீனிவாசன் சந்தோஷமடைந்து பிரம்மாவையும், ஈஸ்வரனையும் வரவழைத்து இச்சுபசெய்தியைதெரிவித்து விவாஹ காரியங்களை செய்ய நிச்சயித்து குபேரனிடம் கோடி பதினன்கு லக்ஷம் வராகன்கள் கடன் வாங்கி சூரியனை அனுப்பி கொல்லாபுரத்திலுள்ள லக்ஷ்மி தேவியை அழைபித்து பந்துமித்ர பரிவாரங்களுடன் பிரம்மாதி தேவர்களுடன் ஆகாசராஜ பட்டணம் சேர்ந்து சுப முகூர்த்தத்தில் பத்மாவதியை விவாஹம் செய்துக்கெண்டார். ஆகாசராஜன் பத்மாவதிக்கும் ஸ்ரீனிவாசனுக்கும் வஸ்திரங்களையும், விலையில்லா ஆபரணங்களையும் சமர்ப்பித்து மகா வைபவத்துடன் அவர்களை அனுப்பிவைத்தார். ஸ்ரீயஃபதியான ஸ்ரீனிவாசன் பந்துமித்திரர்களுடன் புறப்பட்டு சேஷாசலம் வரும்போது வழியில் அகஸ்தியாஸ்ரமம் வந்து சேர்ந்தார். அகஸ்தியர் ஸ்ரீனிவாசனைப் பார்த்து விவாஹமான ஆறுமாதங்கள்பர்வதாரோஹணம் செய்யக்கூடாதென்று சொல்லி தன்னுடைய ஆஸ்ரமத்திலேயே வசிக்க வேண்டுமென்று சொல்ல அகஸ்தியர் வார்த்தைகளைக் கேட்டு ஸ்ரீனிவாசன்

அங்கே வசிப்பதற்கு ஒப்புக்கொண்டு, பிரம்மாதி தேவர்களும் அவரவர்கள் யதாஸ்தானங்களுக்கு போகும்படி உத்தரவு கொடுத்தார். ஸ்ரீனிவாசன் தன் பக்தனுன தொண்டமானனை அழைந்து சேஷா சலத்தில் தனக்கு ஒரு கோவில் கட்டும்படி கட்டளை யிட்டார். தொண்டமானன் கோவில் கட்ட நல்ல ஸ்தலத்தை காட்டும்படி ஸ்ரீனிவாசனைபிரார்தித்தார். ஸ்ரீனிவாசன் தான் வசித்துவந்த (புற்றிருந்த) இடத்தில் ஆனந்தநிலயத்தை நிர்மிக்கும்படியும், முதல் பிராகாரத்தில் வைகுண்டவாயில்களும் இரண்டாம் பிராகாரத்றில் சமையல் கூடம், யாகசாலைகள், கல்யாண மண்டபம், பரிமளகிருஹமும், மூன்ரும் பிராகாரத்தில் ஆஸ்தான மண்டபங்களும், இதர மண்டபங்கள், ஸப்த துவாரங்கள், இரண்டு கோபுரங்கள், ஒருதுவஜஸ்தம்பம் நிர்மிக்க தொண்ட மானனுக்கு உத்தரவு கொடுத்தார். இன்னும் இந்த கலியுகத்தில் பக்தர் வசிப்பதற்கு மண்டபங்களும் நிர்மாணிக்கும்படி சொன்னுர். இப்படி ஸ்ரீனிவாச னுடைய மனேபீஷ்டப்படி கோவில் நிர்மிக்க வேண்டிய சாமக்ரியங்களை சேர்த்து கோவிலைகட்டி முடித்தார். க்ஷேத்திரத்திற்கு வரும் யாத்ரீகர் களுக்கு செளகர்யார்த்தமாய் வழியில் மண்டபங்கள் கோபுரங்கள் நிர்மித்து அகஸ்தியாஸ்ரமம் சேர்ந்து ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து கோவிலுக்கு எழுந் தருளும்படி பிரார்தித்தார். ஸ்ரீனிவாசன் தொண்ட மானின் பிரார்த்தனைகளை அங்கீகரித்து பிரம்மாதி தேவர்களை அழைப்பித்து அகஸ்தியாஸ்ரமத்தி லிருந்து பேரி மிருதங்க வாத்தியங்களுடன் தேவ

துந்துபி கோஷங்களுடன் புறப்பட்டு சேஷாத்ரி சேர்ந்து சுப முகூர்த்தத்தில் ஆனந்த நிலயத்தில் பிரவேசித்தார். தேவர்கள் புஷ்பமாரி பொழிந்து அனேக விதங்களில் ஸ்துதித்தனர். ஸ்ரீனிவாசன் பத்மாவதியை தன் வக்ஷஸ்தலத்தில் வைத்து சங்கு, சக்ரங்கள் இல்லாமல் தனது இடது கையை தன் பாதங்களை காட்டி தன்னை தியானிக்கும் பக்தர்களுக்கு தன் பாதம் வைகுண்டமென்றும், கிருஹஸ்தர்களுக்கு சம்சாரமென்னும்சாகரம் முழங்கால் ஆழமென்றும், காட்டிக்கொண்டு தேவர்களுக்கும், மனிதர்களுக்கும் தரிசனம் கொடுத்து வருவதாய் சொன்னார். அப்போது பிரம்மா ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து ஸமஸ்தபூதகங்களின் க்ஷேமத்தின் பொருட்டு இந்த சன்னதியில் இரண்டு ஜோதிகள் கலியுக அந்தியம் வரையும் பிரகாசிக்க வேண்டுமென்றும், தொண்டமான் நிர்மித்த இந்த ஆனந்த நிலயம் எப்போது நசித்து போகுமோ இந்த இரண்டு ஜோதிகள் எப்போது அணைந்து போகுமோ அது வரையில் தங்கள் அவதாரம் பூலோகத்தில் இருக்க வேண்டியதாய் வரம்தர வேண்டினார். ஸ்ரீனிவாசன் பிரம்மா கேட்டபடி வரம் கொடுத்தார். (அந்த இரண்டு ஜோதிகள் இப்போதும் ஸ்ரீனிவாசன் ஆலயத்தில் பிரகாசித்து வருகிறது.)

## பிரம்மதேவனால் பிரம்மோத்ஸவம் செய்வித்தல்

பிரம்மா ஸ்ரீனிவாசனுக்கு பிரம்மோத்ஸவம் செய்ய நிச்சயித்தவராய் தொண்டமானை தூண்டி வேண்டிய வாஹனங்கள், ரதங்கள் செய்து ஸ்ரீனிவாசனுடைய அனுமதியை கோரி பிரார்த்தித்தார்.

ஸ்ரீனிவாசன் பிரம்மாவைப் பார்த்து நான்கு வேதங்களுக்கு சமானமான நான்கு மூர்த்திகளையும் நிர்மாணிக்கும்படியும் நான்கு மூர்த்திகளுக்கு நான்கு பேர்கள் வைத்து முதலில் உத்ஸவ ஸ்ரீனிவாசமூர்த்தியாகவும் இரண்டாவது உக்ர ஸ்ரீனிவாச மூர்த்தியாகவும், மூன்றுவது சர்வாதிப ஸ்ரீனிவாச மூர்த்தியாகவும், நான்காவது போக ஸ்ரீனிவாச மூர்த்தியாகவும், இருக்கச்செய்து தானே நான்கு மூர்த்திகளுக்கும் மூலவராக இருப்பதாய் சொன்னுர். பிரம்மதேவர் அதேவிதமாய் நான்கு மூர்த்திகளை நிர்மித்து பிரம்மோத்ஸவம் பிராரம்பித்து சகல தேவதைகளையும் அழைப்பித்து துவஜாரோஹணம் முதல் ரதோத்ஸவம் வரையில் உத்ஸவத்தை ஆஸ்விஜ மாதம் (புரட்டாசி மாதம்) அதிவைபவமாக நடத்தி சகல தேவர்களும் பிரார்தித்து ஸ்ரீனிவாசன் அனுமதி பெற்று அவரவர்களுடைய நிவாசஸ்த்தானங்களுக்கு மோய்விட்டார்கள்.

### கூர்மன் என்னும் பிராம்மணர் சரித்திரம்

பிரம்மதேவர் ஸ்ரீனிவாசனுக்கு பிரம்மோத்ஸவம் செய்த பிறகு தொண்டமான் சக்ரவர்த்தி சிலகாலம் ஸ்ரீனிவாசனுடைய சேவை செய்து இப்படிக் கொண்டு ராஜ்யபாலனம் செய்து வந்தார். யிருக்க ஒரு தினம் கூர்மன் என்னும் பிராம்மணர் தன் தகப்பனரின் அஸ்திகளை எடுத்துக்கொண்டு கங்கா ஸ்நானத்திற்கு தன் மனைவி மகனுடன் புறப்பட்டு தொண்டமானனை சந்தித்ததார். இராஜா பிராம்மணனுக்கு தகுந்தமுறையில் உபசரித்து, வந்த விவரத்தைக் கேட்க பிராம்மணர் சொல்லுகிருர்.

என் தன்தையின் அஸ்திகளை எடுத்து கங்கா ஸ்நானத்திற்கு செல்லுகையில் என் மனைவி கற்பவதியானள் என் மகன் சிறியவனைதால் நடக்க முடியாதவனய் இருக்கிருன் இவர்களை சில காலம் உங்கள் சம்ரக்ஷிணையில் வைத்திருக்கும்படி தங்களை கேட்டுக் கொள்கிறேன் என்று கூற, ராஜன் அதற்கு சம்மதித்து அவர்களுக்கு ஒரு தனி கட்டிடத்தை ஏற்படுத்தி, வேண்டிய சமஸ்தமான சாமக்ரியங்களையும் கொடுத்து ஒருவரும் அதில் பிரவேசிக்க முடியாமல் வீட்டை பூட்டி பிராம்மணனுக்கு கொஞ்ச பணம் கொடுத்து கங்கா ஸ்நான்த்திற்கு அனுப்பினர். பிராம்மணனுடைய மனைவி மகன் அந்தவீட்டில் சுகமாய் காலங்கழித்து வந்தார்கன். இப்படி தொண்டமான் சக்ரதர்த்தி ராஜ்யபாரம் செய்துக் கொண்டு, இந்த பிராம்மணர் மனைவி மகனை மறந்துவிட்டார். சில நாட்களில் இராஜன் கொடுத்த சாமக்ரியங்கள் தீர்ந்தவுடன் அவர்கள் வீட்டைவிட்டு வெளிவர முடியாமலும். ராஜனுக்கு இவர்கள்மேல் கவனமில்லாமல் போனதால், இவர்கள் சில நாட்கள் பட்டினியிருந்து கடைசியில் மரண மடைந்தார்கள். சில நாட்களுக்கு பிறகு கங்கா ஸ்நானத்திற்கு சென்றிருந்த பிராம்மணர் ஸ்நானம் முடித்துக் கொண்டு தோண்டமானனுடைய ஆஸ்தானம் சேர்ந்து தான் கொண்டுவந்த கங்காதீர்த்தமும் பிரசாதங்களையும் இராஜனுக்கு கொடுத்தார். அப்போது பராம்மணரை பார்த்ததும் இராஜனுக்கு அவர் மனைவி மகன் நினைவு வந்தது இராஜன் யோசித்து பிராம்மணரை ஸ்நானம்செய்து வரும்படி கட்டளை யிட்டார். ஸ்நானத்திற்கு போன பிறகு

தன் மகனை கூப்பிட்டு பிராம்மணருடைய மனைவி மகன் க்ஷேமத்தை தெரிந்து வரும்படி சொன்னார். இராஜகுமாரன் அந்த வீட்டை திறந்து இறந்து போன அவர்கள் சரீரங்களை பார்து தன் தந்தை யிடம் சென்று இந்த விருத்தாந்தத்தைச் சொன்னான் இதை கேட்டவுடன் இராஜன் ஒன்றும் தோன்றாமல் யோசிக்கலானார். அப்போது பிராம்மணர் ஸ்நானம் செய்துவிட்டு இராஜனிடம் வந்தார். ராஜன் பிராம் மணனைப்பார்த்து போஜன சாமக்ரியங்களை பெற்றுக் கொண்டு சமைத்து சாப்பிடச் சொன்னார், பிராம் மணர் தன் மனைவி மகனைப் பார்க்கவேண்டுமென்று கேட்டார் இராஜன் பிரம்மணர் கோரிக்கையைக் கேட்டு அவர் மனைவியும், மகனும் அந்தப்புரஸ்திரீ களுடன் சேர்ந்து வேங்கடாசலத்திற்கு ஸ்ரீனி வாசனை தரிசிக்க சென்றிருப்பதாயும் மறுதினம் வருவார்களென்றும் சொல்லி, போஜன சாமக்ரியங் களைக் கொடுத்து அனுப்பினார். அதை பெற்றுக் கொண்டு பிராம்மணர் புரப்பட்டுச் சென்றார். இராஜன் அன்றிரவு சேஷாசலம் சென்று ஸ்ரீனி வாசன் பாதாரவிந்தங்களின் வேல் விழுந்து பிராத் தித்தார். ஸ்ரீனிவாசர் தொண்டமானன் ராஜனை எவ்வளவு தேற்றினலும் பாதங்களை விடாமலிருக்க, அவன் மனோபாவங்களை தெரிந்துக் கொண்டு அபய மளித்து பிரம்ம ஹத்யா தோஷத்திலிருந்து நிவர் திக்க அந்த சவங்களை எடுத்துவரச்சொன்னார். உடனே இராஜன் தைரியம் கொண்டு அந்த சவங் களை சேஷாசலம் சேர்ந்தார். ஸ்ரீனிவாசன் தொண்டமானனை பார்த்து பாண்டவ தீர்த்தத்தி னிடமுள்ள அஸ்தி தீர்த்தம் கொண்டு வரும்படி

சொன்னார். உடனே அஸ்தி தீர்த்தத்தைக்கொண்டு வந்து ஸ்ரீனிவாசனிடம் கொடுத்தார். அத்தீர்த்தத்தை பகவான் சவங்களின் மேல் தெளித்தார். உடனே பிராம்மணனுடைய மனைவி மகன் உயிர் பெற்றெழுந்தனர். தொண்டமான் ராஜன் ஸ்ரீனிவாசனை அநேக விதங்களில் ஸ்தோத்திரம் செய்து உயிர் பெற்றவர்களை நமஸ்கரிக்கச் செய்தார். அப்போது ஸ்ரீனிவாசன் இராஜனைப்பார்த்து கலியுகத்தில் என் பக்தர்கள் தெரிந்தும் தெரியாமலும் அநேக பாவங்கள் செய்து கடைசியில் ஒன்றும் தோன்றாமல் என்னை அனுகுவார்கள். அப்படிபபட்ட பாவங்களை நிவர்த்திக்கமுடியாது. இப்படிப்பட்ட பாவங்கள் செய்து என்னை அனுகிவரும் பக்தர்களை நான் காப்பாற்றுவிட்டால் என்னை நிந்திப்பார்கள் ஆதலால் இது முதல் நான் அர்ச்சாவதாரமெடுத்து இந்த ஆனந்த நிலயத்தில் வசிப்பேன் என்று சொல்லி ஆனந்த நிலயத்தை காட்டினார். இராஜன் அந்த ஆனந்த நிலயத்தைப்பார்க்க, பகவான் சதுர்புஜங்களுடன் அபயஸ்த்தத்துடனும் ஆனந்த நிலயத்தில் மௌனமாய் நின்றார். உடனே இராஜன் உயிர் பெற்றவர்களை அழைத்துக் கொண்டு தன் ஆஸ்தானம் சேர்ந்து பிராம்மணனுக்கு அவர் மனைவியையும் மகனையும் ஒப்பித்து நமஸ்கரித்து நின்றார். பிராம்மணர் மிக்க ஆனந்த முடையவராய் மனைவி, மகனைப் பார்த்து ஸ்ரீனிவாசனை தரிசித்த விசேஷத்தைக கேட்டார். பிராம்மணர் மனைவி நடந்த விருத்தாந்தத்தைச் சொன்னாள். பிராம்மணர் அதைக் கேட்டு ஆச்சர்யப்பட்டு தொண்டமானின் பிரபாவத்தைக் கொண்டாடி மனைவி, மகனுடன் தன் கிரா

மம் போய் சேர்ந்தார். தொண்டமான் தன் குமாரனுக்கு இராஜ்யத்தை ஒப்புவித்து வேகங்டாத்ரி சேர்ந்து சதாபகவானை தியானித்துக்கொண்டு ஸ்ரீனிவாசனுக்கு புஷ்பவனங்கள் நிர்மித்து புஷ்பகைங்கர்யங்கள் செய்து அநேக ஆபரணங்கள், தனகனக வஸ்து வாஹனங்கள் செய்வித்து பிரம்மதேவனால் பிராரம்பிக்கப்பட்ட பிரம்மோத்ஸவத்தை பிரதி வருஷமும் நடத்திக் கொண்டு சில காலத்திற்க்கு ஸ்ரீனிவாசன் திருவடியை அடைந்தார்.

## க்ஷேத்திர பரிபாலன விவரம்

தொண்டமானுக்கு பிறகு அவர் குமாரன் விக்ரமன் ஆண்டான். பிறகு பல்லவர், பாண்டியர், சோழராஜரால் ஆளப்பட்டு பிறகு விஜயநகர இராஜர் ஆளுகைக்குட்பட்டிருந்தது. அவர்கள் அநேக ஆபரணங்கள் செய்வித்து உத்ஸவ நாட்களில் ஸ்ரீனிவாசனுக்கு சமர்ப்பித்து வந்தார்கள். ஆகாசராஜனால் கொடுக்கப்பட்ட கிரீடமும் சூரிய கடாரியும் அநேக ஆபரணங்களும் முக்யமானவை. இப்படி விஜயநகர இராஜர்களால் பாலிக்கப்பட்ட பிறகு முகம்மதீயர் ஆளுகைக் குட்பட்டு சில காலத்திற்கு பிறகு 1801-வது வருஷம் முதல் ஈஸ்ட் இண்டியா கம்பெனியார் ஆளுகையில் வந்தது 1842-வது வருஷம் பிரிடீஷார் மதாசாரங்களில் பிரவேசிக்க கூடாது என்று தேவஸ்தானத்தை இந்த கிராமத்தாருக்கே ஸ்வாதீனம் செய்ய நிச்சயித்து சில உத்யோகஸ்தர்களை திருமலைக்கு அனுப்ப அவர்கள் திருமலைக்கு வந்து விசாரித்ததில் இவ்விடம் ஸ்திரமாய் வசிப்பவர்கள் இல்லாததால்

அப்போது பூஜைகள் செய்து வந்த பிராம்மணர்களை அழைப்பித்து கேட்டதில், அவர்கள் இருதரத்தார். அவர்களில் ஒற்றுமை இல்லாததால் அவர்களுக்கு கொடுக்க இஷ்டப்படாமல் அப்போது ஹத்திராம்ஜீ மடத்தவர்கள் சுமார் எட்டி நூற்ருண்டுகளாய் இந்த க்ஷேத்திரத்தில் ஒரு மடத்தை நிர்மித்து சதா பகவானை தியானித்து, சுவாமிக்கு வேண்டிய புஷ்ப கைங்கர்யங்கள் செய்துக் கொண்டு இவ்விடம் வரும் யாத்ரீகர்களுக்கும், சாதுக்களுக்கும், வசதி போஜனம் முதலானவைகள் செய்து எப்போதும் இவ்விடமே வசித்து வந்தார்கள். அப்போது ஸ்ரீமஹந்து சேவாதஸ்ஜீ அவர்கள் அந்த மடத்தை ஆண்டு வந்தார். ஈஸ்ட் இண்டியா கம்பெனியார் சேவாதாஸ்ஜீ அவர்களுக்கு இந்த தேவஸ்தானத்தையும் இதற்கு சேர்ந்த திருப்பதி திருச்சானூரிலுள்ள தேவஸ்தானங்களையும், பகவானுடைய வஸ்திராபரணங்களையும், வட ஆற்காடு ஜில்லா கலெக்டர் மூலமாய் ஒப்புவித்து, இந்த க்ஷேத்திரத்திலுள்ள புரோகிதர்களுக்கு சில மான்யங்களும், தேவஸ்தான அர்ச்சகர்களுக்கு சில மான்யங்களும், ஏற்படுத்தி இன்னும் அநேகமாய் கைங்கரியம் செய்பவர்களுக்கும், மிராசிதார்களுக்கும், மிராசிகள் கொடுத்து எல்லோருக்கும் இவ்விடம் சௌகர்யங்கள் செய்வித்து புறப்பட்டுப் போனுர்கள், அது முதல் இந்த தேவஸ்தானத்தை மஹந்து மடத்தாரே பரிபாலித்து இப்படியாக ஐந்து மஹந்துகள் பகவானின் காரியங்கள் பக்தி சிரத்தைகளுடன் செய்து வந்தார்கள். கடைசியில் இராமகிசோர் தாஸ் சிஷ்வரான கீர்த்தி பெற்ற ஸ்ரீமஹந்து பிரயாக

தாஸ்ஜீ அவர்கள் 1900-வது வருஷம் மஹந்து பதவி ஸ்வீகரித்து 1933-வது வருஷம் வரையில் தேவஸ்தானத்தை ஸ்வயமாய் பரிபாலித்து வந்தார். இவருடன் கூட சிஷ்யரான இராமலக்ஷ்மண தாஸ்ஜீ அவர்கள் திருமலை மடத்திற்கு அதிகாரியாக இருந்தார். பகவானிடம் பக்தியுள்ளவராய் ஸ்ரீனிவாசனுக்கு காலாகாலத்தில் பூஜை வகையிராக்கள் செய்வித்து, யாத்ரீகர்களுக்கு சாக்ஷக்ஷாத் வேங்கடேஸ்வரனின் பிரதிநிதியாய் விளங்கினர். இவர்கள் காலத்தில் தேவஸ்தானம் நல்ல அபிவிருத்தியடைந்து, இவர் காலத்தில் வைக்கப்பட்ட தங்க கலஸம் ஸ்ரீனிவாசனுடைய ஆனந்த நிலயத்தின்மேல் பிரகாசித்து வருகின்றது. இந்த கலஸம் சுமார் முன்னூறு வருஷங்களுக்குமுன் மேலிருந்து விழுந்து விட்டது. இவர் இந்த கலஸத்தை 1907-வது வருஷம் வைத்து கீர்த்தி பெற்ருர். இவர் மேற்கு வீதியில் ஓர் பெரிய சத்திரமும், ஒரு நந்தவனமும் நிர்மித்து, அதில் ஒரு மண்டபத்தை கட்டி அதில் பிரதி புனர்வசு நக்ஷத்திரத்தில் ஸ்ரீராம லக்ஷ்மண சீதா, ஆஞ்ஜனேயர்களை மங்கள வாத்யங்ளுடன் எழுந்தருளச் செய்து ஆஸ்தானம் செய்வதற்காக தேவஸ்தானத்தில் கொஞ்சம் பணம் செலுத்தி அதனல் வரும் வருமானத்தில் பிரதி புனர்வசு நக்ஷத்திரத்தில் ஸ்ரீராமருடைய உத்ஸவம் செய்து வந்தார். (இப்போதும் அதேவிதமாய் ஸ்ரீராமருடைய உத்ஸவம் நடந்துவருகிறது.) ஆனல் அவர் காலத்தில் நடந்த வைபவம் பிரதி நக்ஷத்திரமும் சரியாய் இப்போது நடப்பதில்லை. இப்போதும்

இவர் கட்டிய சத்திரத்தில் அநேக விவாஹகாரியங்களுக்கும், யாத்ரீகர்களுக்கும், கிராமவாசிகளுக்கும் வெகு சௌகர்யமாய் இருக்கிறது. இப்படி அவர் அநேக தர்ம காரியங்கள் செய்து 1916-1917 ஹு மத்தியில் ஸ்ரீ ராமபிரானுக்கு மூன்று நாள் அதிவைபவத்துடன் புனர்வசு நக்ஷத்திர உத்ஸவம் ஸ்வயமாய் நடத்தி வைத்து மூன்ருவது நாள் கடைசியில் சரீரம் விட்டு ஸ்ரீனிவாசனுடைய பாதாரவிந்தம் சேர்ந்தார். (இராமலக்ஷ்மண பாவாஜீ அவர்கள்) 1900 ஹு முதல் ஸ்ரீ மஹந்து பிரயாகதாஸ்ஜீ அவர்கள் பரிபாலனத்திற்கு வந்த பிறகு திருமலையில் ஸ்வாமி புஷ்கரணியில் சில லக்ஷ ரூபாய்கள் சிலவு செய்து நீராழிமண்டபமும், ஸ்ரீ ஆதிவராஹஸ்வாமிக்கு ஆலயமும் கட்டி வைத்தார். நீராழி மண்டபம் 1910-வது வருஷம் ஆரம்பித்து 1917-வது வருஷத்தில் பூர்த்தி செய்து, கும்பாபிஷேகம் செய்தார். வராஹ ஸ்வாமி கோவில் 1912-ல் ஆரம்பித்து 1929-வது வருஷத்தில் முடித்து கும்பாபிஷேகம் செய்தார். 1945-வது ஹு விசாரணைகர்த்தா ஆபீசும் (தேவஸ்தான ஆபீஸ்) ஆஸ்பத்ரியும் கட்டப்பட்டது. கோவுகளின் சம்ரக்ஷணைக்காக பாபநாசம் போகும் வழியில் ஒரு பெரிய கோசாலை கட்டப்பட்டது. திருமலை ஸ்ரீ ஹத்திராம்ஜீ மடத்தில் யாத்ரீகர்கள் சௌகர்யார்தம் சுமார் 100 ரூம்கள் கட்டப்பட்டது. அப்போது திருமலைக்கு யாத்ரீகர்கள் கொஞ்சமாய் வருவதால் அதிகமான சத்திரங்கள் கட்ட பிரயத்னிக்கவில்லை இந்த மஹந்து பரிபாலனத்திற்கு வந்த பிறகு இவ்விடத்தின் மஹிமை பிராபல்யமாய் யாத்ரீகர்களை அதிகமாய் வர ஆரம்பித்தபோது திருப்பதி ரயில்வே

ஸ்டேஷனுக்கு சமீபம் ஒரு பெரிய சத்திரத்தை கட்டி வைத்தார். சத்திரத்திற்கு தண்ணீர் ஆதாரத்திற்காக சத்திரம் மேற்கு திசையில் ஓர் குளம் கட்டி வைத்தார். 1921 ஸ்ரீ திருப்பதியிலிருந்து மின்சார தீபங்கள் போட உத்தேசித்து ஆர். சேஷசாயி பிரதர்ஸ் அவர்களால் மின்சார விளக்குகளை போடுவதற்கு சில லக்ஷக்கணக்கான ரூபாய்கள் சிலவு செய்து இரண்டு பெரிய என்ஜென்களை தருவித்து, திருமலைக்கு போகும் வழியில் விளக்குகளை பேட்டார். திருமலை கிராமவாசிகளுக்கு வீடுகளுக்கும், கடைகளுக்கும் மின்சார விளக்குகள் போட்டுக் கொள்ள உத்தரவு கொடுத்தார். திருப்பதியில் யானைகள், குதிரைகள், எருதுகள், பசுக்கள் வசிக்க ஸ்டேபில் கட்டி வைத்தார். பாகாலா மார்கமாய் வரும் யாத்ரீகர்கள் சந்திரகிரி ஸ்டேஷனில் இறங்கி சந்திரகிரி வழியாய் திருமலைக்கு வருவது வழக்கம். அதனல் சந்திரகிரி ரயில்வே ஸ்டேஷனருகிலுள்ள மங்காபுரத்தில் ஓர் பெரிய சத்திரம் கட்டி வைத்தார். திருமலையிலிருந்து அந்த சத்திரத்திற்கு வழியில் மின்சார விளக்குகள் போட்டனர். இந்த மங்காபுரத்தில் ஓர் வேங்கடேஸ்வரர் ஆலயம் இருக்கிறது. அந்த தேவாலயம் மாத்திரம் பாழடைந்து போய் விட்டது. சுவாமியிருக்கும் கர்பகிருஹம் மாத்திரம் இருக்கிறது. ஆஜானுபாகுவான ஸ்ரீவேங்கடேஸ்வரர் விக்ரஹம் மாத்திரம் ஜீவகளைகளுடன் பிரகாசிக்கின்றன. சந்திரகிரி வழியில் வரும் யாத்ரீகர்களுக்கு சௌகர்யமாய் ஸ்ரீபதி வாரி மெட்டு என்னுமிடத்திலிருந்து நல்ல படிகட்டுகள் கட்டிவைத்தார். (தெலுங்கு இராஜர்கள்) சோழராஜர்களுடைய

பரிபாலனத்திற்கு பிறகு இராயர்கள் கட்டிவைத்த கோட்டையும், அவர் வசித்து வந்த மஹால் வகைருக் களும் இப்போதும் சந்திரகிரியில் பார்க்கலாம். திருமலை-திருப்பதி தேவஸ்தான ரிகார்டுகள் பிரிண்ட்செய்ய சென்னையில் மஹந்து பிரஸ் என்று ஒரு அச்சகம் வைத்து தேவஸ்தான ரிகர்டுகளை பிரிண்டு செய்து வந்தார். சுமார் 35 லக்ஷ ரூபாய் கள் சர்க்காருக்கு கடனாக கொடுத்து இருந்தார். 75 லக்ஷம் ரூபாய்கள் கொடுத்து தாலுக்காக்கள் வாங்கி யிருந்தார். இந்த காரியங்கள் எல்லாம் பக்தர்கள் வேங்கடேஸ்வர ஸ்வாமிக்கு செலுத்தி வந்த காணிக்கையிலிருந்தே செலவிட்டு வந்தார். அப்போது தேவஸ்தானத்திற்கு வருமானம் குறைவு இந்த குறைந்த வருமையில் இத்தனை மஹத்தான காரியங்களை செய்வித்து க்ஷேத்திர நிபந்தனைகளுக் கும் பங்கமேற்படாமல் க்ஷேத்திர நிபந்தனைகளுக்கு விரோதமாய் நடந்தவர்களை தண்டித்து க்ஷேத்தி ரத்தை பவித்ரமானஸ்தலமாய் பரிபாலித்து வந்தார் இந்த க்ஷேத்திர வாசிகளும் க்ஷேத்திர நிபந்தனைகளை அனுசரித்து நடந்து வந்தார்கள்.

## க்ஷேத்திர நிபந்தனைகள்

பாதரக்ஷைகளை உபயோகிக்க கூடாது.
மதுபானம் செய்யக் கூடாது.
மாமிசம் சாப்பிடக் கூடாது.
கட்டில் மேல் படுக்கக் கூடாது.
கீழ்ஜாதி காரர்கள் மலைமேல் வரக்கூடாது.
ஸ்திரீகள் புஷ்பவதியாகக் கூடாது.
கர்பிணிகள் பிரசவிக்கக் கூடாது.

புஷ்பங்கள் தலையில் தரிக்கக் கூடாது.

ஸ்நானம் செய்யாமல் கோவிலுக்குள் போகக் கூடாது.

குடை பிடித்துக் கொண்டு கோவிலுக்குள் போகக் கூடாது.

தாம்பூலம் போட்டுக் கொண்டு ஆலயத்திற்குள் நுழையக் கூடாது.

ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு நைவேத்தியம் ஆகாத பூர்வம் சாப்பிடக் கூடாது.

இந்த மேற்கண்ட நிபந்தனைகளை நிறைவேற்ற தேவஸ்தானம் சுற்றிலும் மூன்று மைல் தேவஸ்தான ஆதீனத்தில் உள்ளது. இதற்காக சர்காரும் ஒரு உத்தரவு கொடுத்திருக்கிறது. அப்படியே நடந்து வந்தது. பிறகு மஹந்து மடத்தவரே க்ஷேத்திர நிபந்தனை மீரி நடந்தார்களென்று திருமலை-திருப்பதி யிலிருக்கும் சில பிராம்மணர்கள் மஹந்து பரி பாலனத்தை நிவர்த்தி செய்ய எண்ணினார்கள். அப் போது இருந்த சர்கார் இதைப்பற்றி விசாரிக்க வில்லை. அப்போது மஹந்து பிரயாகதாஸ்ஜீ அவர் களுக்கு புத்தி சுவாதீன மில்லாமலிருந்தது. அப் போது அவருக்கு 5 சிஷ்யர்கள் இருந்தனர். அவர் களில் பெரிய சிஷ்யரான ராமசரனதாஸ் என்பவரை மஹந்துவின் பிரதிநிதியாய் நியமித்து பரிபாலனம் செய்துவந்தார். அவர் சுமார் இரண்டு வருஷம் பரிபாலித்தார். ஆனால் அவர்கள் சிஷ்யர்களில் ஒற்றுமை யில்லாமல் சில தடைகள் ஏற்பட்டது. இதற்குள் மஹந்திற்கு புத்தி சுவாதீனமாயிற்று. சிஷ்யர்களின் சச்சரவுகளைக் குறித்து யோசித்து

தேவஸ்தான பரிபாலனத்தில் அசிரத்தை ஏற்பட்டதை சில பெரிய மனிதர்களால் சர்காருக்கு ரிகார்டு மூலம் நிரூபித்து சர்கார் 1933-வது வருஷம் மஹந்து பரிபாலனத்தை விலக்கி 7 பேர் அடங்கிய கமிடியை ஏற்படுத்தி மஹந்து அவர்களை தன் ஆயுள் முழுவதும் அக்கமிடிக்கு தலைவராய் நியமித்தனர். அது முதல் தேவஸ்தான பரிபாலனம் கமிடிக்கு உட்பட்டு நடந்து வருகிறது. ஸ்ரீ மஹந்து பிரயாக தாஸ்ஜீ அவர்கள் 1947-வது வருஷம் திருமலையில் ஹத்தீராம்ஜீ மடத்திலேயே தன் சரீரத்தை விட்டு ஸ்ரீனிவாசன் திருவடி சேர்ந்தார்.

### கமிடீ பரிபாலனம்

(1933-வது வருஷத்திலிருந்து சர்காரால் நியமிக்கப்பட்ட கமிஷ்னர்கள்.)

1. ஸ்ரீ C. துரைசாமி கௌண்டர் அவர்கள்
2. ,, K. சீதாராம செட்டியார் ,,
3. ,, A. ரங்கநாத முதலியார் ,,
4. ,, C. சாம்பய்ய பந்துலு ,,
5. ,, B.V. ஸ்ரீஹரிராவ் நாயுடு ,,
6. ,, A. ஜயராமுலு நாயுடு ,,
7. ,, B. வீராசாமி நாயுடு ,,

மேல் 7 கமிஷ்ணர்கள் காலத்தில் ஸ்ரீ C. அன்னராவ் பேஷ்காராகயிருந்து, 1949-வ வருஷம் கமிஷ்னர் பதவிக்கு வந்தார். பிறகு 1949-வது வருஷம் ஸ்ரீ கத்தி வெங்கடசாமி நாயுடு அவர்கள் தேவஸ்தானத்திற்கு தலைவராய் வந்த பிறகு ஸ்ரீ C. அன்னராவ் (Executive Officer) ஆபீஸராய் நியமித்தார். இந்த கமிடி வந்த பிறகு தேவஸ்தானத்திற்கு வருமானம்

அதிகமாயிற்று. சிலவு மிக அதிகமாயிற்று. வருஷம் 1-க்கு 150 லக்ஷம் முதல் 200 லக்ஷம் வரையில் வந்துக்கொண்டிருக்கிறது. சராசரி வருஷம் ஒன்றுக்கு 120 லக்ஷம் வீதம் சுமார் 4, 5. வருஷங்களாய் வருமானம் வந்திருக்கிறது. இந்த வருமானத்திலிருந்து திருமலைக்கு வரும் யாத்ரீகர்களுக்கு கீழ்கண்ட சௌகர்யங்கள் செய்திருக்கிருர்கள்.

திருமலையில் சிமெண்டு ரூமுகள் கட்டியுள்ளனர். பழய ஆயிரங்கால் மண்டபத்தை ரிபேர் செய்து ரூம்கள் கட்டியுள்ளனர். ஆயிரங்கால் மண்டபத்தின் மேல் சிமெண்டு தகுடுகளால் ரூம்கள் கட்டுவித்தனர். மஹந்து கட்டிவைத்த V.K. ஆபீசை புதிய்தினுசில் தயார் செய்து ரூமுகள் கட்டினர். சுவாமி கோவிலிலும் மற்றும் வெளியுள்ள மூன்று கோபுரங்களில் சித்திர பதுமைகளை ஏற்படுத்தி ரிபேர் செய்வித்தனர். திவானம் ரிபேர் செய்வித்து இரண்டு பாகமாக்கி திணம் 1-க்கு ஒரு பாகத்திற்கு ரூ.3-50 ந. பை வீதம் வாடகைக்கு கொடுக்கிருர்கள். சில சிமெண்டு ரூமுகளை தினம் 1-க்கு ரூ. 2-00 முதல் ரூ. 3-00 வறை வாடகைக்கு கொடுக்கிருர்கள். இந்த அறைகளில் மின்சார விளக்குகள். விசிரிகள், கட்டில் முதலியவைகள் போடப்பட்டிருக்கின்றது. இன்னும் அநேக பக்தர்களும் நூற்றுக் கணக்கான டொனேஷன் பில்டிங்குகள் கட்டியுள்ளன கல்யாண கட்டத்தினிடம் உள்ள மொண்டிகோபுரத்தை ரிபேர் செய்து பதுமைகளை ஏற்படுத்தி வர்ணம் தீட்டி வெகு அழகாய் தயார் செய்திருக்கிருர்கள். மஹந்து கட்டிய ஆஸ்பத்திரி எதிரில் காலி இடத்தை விசால

மாக்கி சிமெண்டு பிளாட்பாரம் கட்டினர். பஸ் ஸ்டாண்டில் யாத்ரீகர்கள் உட்கார விசாலமான தகர ஷெட்டுகள் போட்டனர். ஷெட்டுனிடம் உள்ள கக்கூசுகள் ரிபேர் செய்வித்து தண்ணீர் பைப்புகள் வைத்தனர். இந்த கிராமத்தில் பொது கக்கூசுகள் இல்லே. சில நாட்களில் இந்த காரியத்தைச் செய்ய ஏற்பாடு செய்திருக்கிறுர்கள். குடிதண்ணீருக்கு கஷ்டமில்லாமலிருக்க கோகர்பம் டாம்கட்டி குழாய் கள் மூலம் தண்ணீர் கொண்டுவந்தனர். யாத்ரீகர் களுக்கு திருமலேயிலேயே பாபவினுச தீர்த்தம் கிடைத்துவருகிறது. பாபவினுசனம் போகும் வழி யில் மின்சாரவிளக்குகள் போட்டனர். ஹத்தீராம்ஜீ மடத்திற்கு பக்கத்திலிருக்கும் சங்கு தீர்த்தத்திற்கு அருகில் பிரைவேட் ரூமுகள் கட்டி யுள்ளனர். இன் லும் யாத்ரீகர்களால் பணம் வசூல் செய்து தேவஸ் தானத்தார் கொஞ்சம் பணம் போட்டு யாத்ரீகர் பேரில் சில ரூம்கள் கட்டி வாடகைக்கு கொடுத்து வருகின்றனர். திருப்பதியிலிருந்து திருமலேக்கு தாருரோட்டுபோட்டு காரிலும் பஸ்ஸிலும் வரும் யாத்ரீகர்களுக்கு மிகவும் சௌகர்யம் செய்தனர். சுவாமி புஷ்கரணி சுற்றிலும் விசாலமாய் இருக்க ஏற்பாடுகள் செய்து வருகின்றனர். ரங்கதாஸ் நிர்மித்த பூலபாவி (பூங்கிணறு) மிகவும் விசாலமாய் இருந்ததால் அதை சிறியதாய்கட்டியுள்ளனர். இந்த கிணறு ஸ்ரீனிவாசன் ஆலயத்திற்கு வட கிழக்கு பாகத்திலுள்ளது. பாண்டவ தீர்த்தம் செல்லும் வழியில் தேவஸ்தானம் சிப்பந்திகள் வசிக்க 60 ரூம்கள் கட்டியுள்ளனர். திருப்பதியில் ஸ்ரீ மஹந்து கட்டிவைத்த பெரிய சத்திரத்தை இன்லும் பெரிய

தாக கட்டி யாத்ரீகர்களுக்கு சௌகர்யமாய் கட்டியுள்ளனர். திருப்பதியிலிருந்து திருமலைக்கு பஸ் சர்வீசை ஏற்படுத்தியுள்ளனர். சுமார் 70 பஸ்ஸுகள், 15 லாரிகள், 10 வேன்கள் உள்ளன. திருப்பதிக்கு மேற்கு திசையில் காலேஜ் கட்டியுள்ளனர். இந்த காலேஜில் பெண்களுக்கும், ஆண்களுக்கும் தனி த்தனியே சௌகர்யங்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். திருப்பதியில் பால இராகவாச்சாரி தோட்டத்தில் மஹந்து வைத்திருந்த இரண்டு எலக்டிரிக் என்ஜன்களை விற்றுவிட்டார். 1953-வது ஷு ஒரு ஜனரேடர் வாங்கியுள்ளனர். மேட்டூர் கரண்டு வராத சமயத்தில் இந்த ஜனரேடர் சகாயத்தால் சுவாமி கோவிலுல் விளக்கு போடப்படுகிறது. சுவாமிக்கு வெள்ளி இரதம் செய்திருக்கின்றனர். இந்த சௌகர்யங்கள் சுவாமிக்கு யாத்ரீகர்கள் மூலமாய் வரும் வருமானத்திலிருந்தே செலவிடப்படுகிரது. இந்த கமிடி பரிபாலனத்தில் 1933-வது வருஷம் முதல் 1958-வது வருஷம் வரை 25 வருஷங்களில் சுமார் 1500 லக்ஷம் ரூபாய்கள் மேல்கண்ட சௌகர்யங்களுக்கு செலவிடப்பட்டுள்ளன. மஹந்து காலத்தில் சர்காருக்கு கடனாக கொடுத்துள்ள 95 லக்ஷம் ரூபாய்களை விவரமாய் தெரிந்துக் கொள்ள வேண்டுமென்பவர்கள் தேவஸ்தானம் எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் மூலம் தெரிந்துக்கொள்ளலாம். ஸ்ரீ வேங்கடேஸ்வரர் இருக்கும் ஆனந்தநிலயத்தில் பூசியுள்ள தங்க முலாம் போய்விட்டதால் அந்த தகடுகளை எடுத்துவிட்டு புதியதாய் செம்புத் தகடுகளின் மேல் சுமார் நாலாயிரம் துலம் தங்கம் பூசி

ஆனந்த நிலயத்தை ரிபேர்செய்து தங்க மூலாம் பூசிய தகடுகளை போட்டு இருக்கிறுர்கள். அந்த ஆனந்த நிலயம் இப்போது பார்ப்பதற்கு மிக அழகாகவும், ஆனந்தகரமாகவும் உள்ளன. ஆனந்த நிலயத்தின் மேல் உள்ள பழய தங்க தகடுகளில் சுமார் மூன்று அல்லது நாலாயிரம் துலம் லங்கம் இருப்பதாய் மதிப்பிடுகிறுர்கள். இந்த தங்கம் பூசிய தகடுகள் சுமார் 600 வருஷங்களுக்கு முன்பு மூலாம் போட்டதாக ரிகார்டுகள் இருக்கின்றது. அப்போது இந்த ஆனந்தநிலயத்திற்கு செம்புத்தகடுகளின் மேல் எத்தனை துலம் தங்கமூலாம் பூசியதும் இந்த ரிகார்டுகளில் இருக்கலாம். இப்படிப்பட்டன காரியங்கள் நிறைவேற்றிக் கொண்டு கமிடியார் சர்வ காலங்களிலும் யாத்ரீகர்கள் இஷ்டப்படி சர்வ காரியங்கள் நிறைவேற்ற எதிற்பார்த்துக் கொண்டுள்ளனர். தங்களுக்கு வேண்டிய விஷயங்கள் திருமலை தேவஸ்தானம் எக்ஸ்க்யூடிவ் ஆபீசருக்கு எழுதி தெரிந்துக்கொள்ளலாம்.

அட்ரஸ்:—

எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்
திருமலை-திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி போஸ்ட், சித்தூர் ஜில்லா.

திருமலைக்கு யாத்திரையாய் வரும் யாத்ரீகர்கள் தங்கள் ஊருக்கு சமீபமுள்ள ரயில்வே ஸ்டேஷனிலிருந்தே திருமலைக்கே நேராக டிகட்டுகேளுங்கள் அந்த டிகட்டுனுலேயே திருப்பதி மலைக்கு சேரலாம். அப்படி வாங்கப்பட்ட டிகட்டுகளின் மூலமாய் திருப்பதி தேவஸ்தான பஸ்ஸுகளில் கஷ்டமில்லா

மல் பிரயாணம் செய்யலாம். தம் ஊரிலிருந்து டிக்கட் வாங்கி திருப்பதி ரயில்வே ஸ்டேஷனில் இறங்கி ஸ்டேஷனுக்கு சில கெஜ தூரத்தில் தேவஸ்தான சத்திரம் இருக்கிறது. அந்த சத்திரத்தில் இருக்கலாம். இந்த சத்திரத்தில் சூபரெண்டெண்ட் ஆபீஸ் இருக்கிறது. சூபரெண்டெண்டால் சகல விதமான சௌகர்யங்களும் பெற்றுக் கொள்ளலாம். இந்த சத்திரம் யாத்ரீகர்கள் சௌகர்யார்தம். யாத்ரீகரால் ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு சமர்ப்பித்த காணிக்கையால் கட்டப்பட்டு யாத்ரீகர் சௌகர்யத்திற்கு சிலசிப்பந்திகளை தேவஸ்தானத்தார் சம்பளம் கொடுத்து நியமித்துள்ளனர். அவ்விடம் உள்ள உத்யோகஸ்தர்களுக்கும், சிப்பந்திகளுக்கும் எந்த விதத்திலும் பணம் தரவேண்டியதில்லை. சத்திரத்திலுள்ள பஸ்டான்டில் மூட்டை எடுப்பதும், இறக்குவதும் என்ற விஷயம் நடக்கும் போது மாத்திரம் கூலிகளுக்கு தேவஸ்தானத்தார் ஏற்படுத்திய பிரகாரம் பவுண்டு 1-க்கு 1 ந.பை. விதம் கொடுக்க வேண்டிவரும். இந்த சத்திரத்தில் வட்டி காசுகள் கண்கள், பாதங்கள் இன்னும் அநேக விதமான பிரார்த்தனை காசுகள் விற்கப்படும். அதை வாங்கி உண்டியில் போடும்படி சொல்லுவார்கள். அப்படிப்பட்ட காசுகளை போட்டால் சுவாமிக்கு உபயோகப்படுவதில்லை. சுவாமிக்கு தாங்கள் எப்படி பிரார்த்தனை செலுத்த வேண்டுமென்று நினைத்து இருக்கிறீர்களோ அதேவிதமாய் சுவாமிக்கு காணிக்கைகளை செலுத்தி கிருதார்த்தராய் ஆகவேண்டுமே தவிர வேறு விதமாய் தரகர்கள் பேச்சைக் கேட்டு வழியில் தங்களை மோசம் செய்ய தங்கள்பின் வரு

வார்கள். அவர்கள் பேச்சைக் கேட்டு மடத்திலும், சத்திரத்திலும், இதரிடமும் கொடுத்தால் அது சுவாமிக்கு சேராது. இந்த சத்திரத்தில் ஓர் சிற்றுண்டி சாலை ஏற்படுத்தியுள்ளனர். அவ்விடம் சாப்பாடு, டிபன், காபி முதலானவை அவரவர்கள் இஷ்டானுசாரம் லப்யமாகும் யாத்ரீகர் சௌகர்யார்த்தம் ஒரு வாஷிங்லாண்டரி கூட இருக்கிரது. அவ்விடம்சமயானுகூலமாய் துனிகளைசலவைசெய்து தரப்படும். சில ரூமுகள் ரூ. 1-00 முதல் 3-00 வரையில் வாடகைக்கு கொடுக்கிருர்கள். அப்படிப்பட்ட ரூம்களில் மின்சார விசிரிகள் மற்றும் வேண்டிய பர்விசர்கள் கூட உள்ளன. வாடகை கொடுத்தால் மேல்கண்ட சௌகர்யங்களைப் பெறலாம். திருப்பதியில் இன்னும் அநேக சத்திரங்கள் வசதி கிருஹங்கள் உள்ளன. திருப்பதி காந்தி வீதியில் ஸ்ரீ மைசூர் மகாராஜா சத்திரம் உள்ளது. அதில் பிராம்மணவர்களுக்கு சௌகர்யமாய் இருக்கும். திருப்பதி மிட்ட வீதியில் பெண்டியாலா சாம்பய்யா வசதி கிருஹங்கள் உள்ளன. அவற்றில் ஆந்திரா நாட்டை சேர்ந்தவர்கள் அதிகமாய் இறங்குகின்றனர். இவர் இலாகாக்களில் கூடூர் முதல் திருப்பதிவரை ரயிலில் சந்தித்து யாத்ரீகர்களுக்கு அனேக சௌகர்யங்கள் செய்து வருகின்றனர். யாத்ரீகர்கள் சந்தோஷமாய் கொடுக்கும் சம்பாவனையைப் பெற்றுக் கொள்வார்களே தவிர பலாத்காரமாய் பணம் கேட்கமாட்டார்கள். இதேப்போல் திருப்பதி கொத்த வீதியில் சேபியம் வெங்கட்ராமய்ய, ஆதிசேஷய்ய வாரணசி குருமூர்த்தி, பசபர்த்தி கிருஷ்ணய்யா முதலானவர்களும் உள்ளனர். திருப்பதி பட்டுநூல்காரர் தெரு

வில் அநேக வசதி கிருஹங்கள் உள்ளன. அதில் மைசூா, பெங்களூர் இலாகா அவர்கள் இறங்குவார். இப்படி தனியாய் வீடுகளில் இறங்கியவர்கள் பஸ்ஸுகளிலும், கால்நடைகளிலும் திருமலைக்கு போகின்றனர். நீங்கள் இறங்கும் வீடுகளிளும் செப்பு காசுகள், வட்டி காசுகள், கண், பாதங்கள் விற்க வறுவார்கள். அதை சுவாமி ஹுண்டியில் போட போதனை செய்யவருவார்கள். அதைக் கேட்டு மோசப் போகக்கூடாது. சுவாமிக்கு செலுத்தும் பணம் சுவாமிக்கே செலுத்த வேண்டும். இன்னும் கற்பூரம் வாங்கி ஹுண்டியில் போட வேண்டும் என்று சொல்லுவார்கள். இதையும் நம்பாதீர்கள் வெறும் பேச்சுகள் என்று தெரிந்துக் கொள்ள வெண்டியது.

### பஸ் சௌகர்யங்கள்

திருப்பதி தேவஸ்தான சத்திரத்திலிருந்து காலை 5 மணி முதல் இரவு 8-30 மணி வரையில் சுமார் 50 முதல் 60 பஸ்ஸுகள் திருமலைக்கும் போகும் திருமலையிலிருந்து காலை 6 மணி முதல் இரவு 9–30 மணி வரையிலும் 50 முதல் 60 பஸ்ஸு கள் திருப்பதிக்கு வருகிறது. இப்படி திருப்பதி யிலிருந்து திருமலைக்கும், திருமலையிலிருந்து திருப் பதிக்கும் மூன்று தடவை பஸ்ஸுகள் போய் வரு கின்றன. விசேஷ காலங்களில் 5, அல்லது 6 தடவை கள் போய் வருகின்றன. பஸ் டிகட்டு ஒன்றுக்கு ரூ. 1-35 ந.பை. செலுத்தி டிக்கட்டுகள் வாங்க வேண்டும். 3 வருஷங்களுக்கு மேற்பட்ட குழந்தை களுக்கு அரை சார்ஜ் செலுத்தவேண்டும். பஸ்ஸு

களில் டிகட்டு ஒன்றுக்கு 10-பவுண்டு வீதம் சார்ஜ் இல்லாமல் சாமான்கள் எடுத்து போகலாம். அதிக மிருந்தால் பவுண்டு 1-க்கு 0-03 ந.பை. (மூன்று ந.பை.) வீதம் செலுத்தவேண்டும். இப்படிப்பட்ட சௌகர்யத்துடன் தேவஸ்தான சத்திரத்தில் இறங்கினவர்களும் மற்ற சத்திரங்களில் இறங்கின வர்களும் இந்த பஸ்ஸுகளில் திருமலைக்கு போக லாம் கால்நடை மூலம் சென்று தரிசிக்க விருப்ப முள்ள யாத்ரீகர்கள் குதிரை வண்டியிலும். மாட்டு வண்டியிலும் அலிபிரி என்னும் அடிவாரம் வரையில் சென்று அவ்விடமிருந்து படிகள் மூலம் மலை ஏறி கோவிந்தநாம சங்கீர்தனங்களுடன் பகவானை தியானித்துக் கொண்டு போவது பழய கால ஆச்சா ரம். முதல் மலையேறுவது ரொம்பவும் கஷ்டம் 6 மலை கள் கஷ்ட மில்லாமல்போய் ஏழாவது மலை சேர லாம். வழியில் களைப்பாற்றிக் கொள்ள அங்கே மண்டபங்கள் உள்ளன. இந்த வழியில் மூன்று காபி ஹோட்டல்கள், சோடா, பழம் வகைராக்கள் பீடி, சிகரேட்டு கடைகளும் உள்ளன. வழியின் மத்தி யில் திருடர்கள் பயமும் துஷ்ட மிருகங்களின் பய மும் ஒன்றுமில்லை. இப்படி பஸ்ஸுகளிலும், கால் நடைகளிலும் தினம் தோறும் இரண்டாயிரம் முதல் ஐயாயிரம் வரையில் யாத்ரீகர்கள் வருகிறார்கள். திருமலையில் ஆயிரங்கால் மண்டபம் V. K. ஆபீஸ் சத்திரம், பிட்டாபுர சத்திரம் அனந்தாழ்வார் சிமெண்டு பிளாக்கு, ஸ்ரீநிகேதனம், வராஹ நிவாசம், கிருபாநிவாசம், வடக்கு மாடவீதி ஷெட்டு, டிராவ லர்ஸ் பங்களா திவானமும் உள்ளன. இவை யாவும் தேவஸ்தான சத்திரங்கள். இவற்றில் சில

வற்றை தர்மமாய் கொடுக்கிருர்கள். சிலவற்றை ரூம் 2-க்கு ரூ 4-00 முதல் 5-00 வரையில் வாடகைக்கு கொடுக்கப்படுகிறது. வாடகையை அனுசரித்து இந்த ரூமுகளில் வேண்டிய பர்னிசர்கள் கட்டில்கள் மின்சார விசிரிகளும் உள்ளன.

## வைசியர்களுக்கு சத்திரம்

திருமலையில் பொத்தூர் ஐயன்ன செட்டியார் சத்திரம், குப்பவாரி சத்திரம் கிருஷ்ண அண்டு கோ, ஆர்யவைசிய சத்திரம், சேலம் வைசியர் சத்திரம் முதலியவை உள்ளன. இந்த சத்திரங்களில் வைசியர்கள் அதிகமாய் இறங்கலாம். இந்த சத்திரங்களில் தண்ணீர் வசதி, கக்கூசுகள், மின்சார விளக்குகள் இருப்பதினல் யாத்ரீகர் இந்த சத்திரங்களில் வந்து இருப்பது வழக்கம்.

## பிராம்மணர்களுக்கு சத்திரம்

திருமலையில் மைசூர் மஹாராஜா சத்திரம், உத்தராதி மடம், இராகவேந்திர சுவாமி மடம், மஹந்து மடம் இந்த இடங்களில் பிராம்மணர்கள் அதிகமாய் இறங்குவார்கள். இந்த இடங்கள் சுத்தமாய் இருக்கும. பிராம்மணர்களுக்கு அனுகூலமாய் இருக்கும் இந்த சத்திரங்களில் சுமார் 40 ரூம்கள் உள்ளன. மைசூர் சர்கார் உத்யோகஸ்தர்கள் இந்த சத்திரங்களில் இருந்துக் கொண்டு திருமலைக்கு வரும் யாத்ரீகர்களுக்கு சிரத்தையுடன் விசாரித்து தகுந்த சௌகர்யங்கள் செய்து வருகிருர்கள்.

## இந்துஸ்தானியர்களுக்கு சத்திரம்

திருமலையில் கேம்ராஜா சத்திரம், பூனு சத்திரம், மோதிலால் சத்திரம் திருமலையில் ஹத்திராம்ஜீ மடமும் உள்ளன. இந்த சத்திரங்களில் இந்துஸ்தானி தேசத்தவர், பிராம்மணர், க்ஷத்திரியார், வைசியர், முதலானவர்கள் விசேஷமாய் இறங்குவார்கள். இவ்விடம் யாத்ரீகர்களுக்கு அநேக சௌகர்யங்கள் உண்டு.

## வசதி கிருஹங்கள் (வாடகை வீடுகள்)

திருமலையில் அநேக வசதி கிருஹங்கள் உள்ளன. இந்த வசதி கிருஹங்களில் வந்து இறங்குபவர்கள் யாருடைய உதவியுமின்றி தினம் ஒன்றுக்கு 1-50 ந.பை. முதல் ரூ. 2 00 வரை வாடகைக்கு ரூம்கள் கிடைக்கும். மேல் கண்ட ரேட்டுகளில் ரூம் பெற்றுக் கொண்டு இருக்கலாம். இந்த ரூம்களில் உங்களுடைய சாமான்கள் வைத்துக் கொண்டு. சொந்தமாய் பூட்டு போட்டுக் கொள்ள வேண்டும்.

.... முக்ய கவனிப்பு ....

## தலைமுடிப்பு பிரார்த்தனை செலுத்தல்

திருமலைக்கு யாத்திரையாய் வரும் பக்தர்கள் ஸ்ரீவேங்கடேஸ்வரருக்கு தலைமுடி பிரார்த்தனை கொடுப்பதாய் பிரார்த்தனை செய்துக் கொள்வது ஆசாரம். அவை எவ்விடம் செலுத்தினால் தம் பிரார்த்தனை சுவாமிக்கு சேரும் என்பதை தெரிந்துக் கொள்ளவும். திருமலையில் பஸ் ஸ்டாண்டு எதிரில் கல்யாணகட்ட சங்கத்தாரால் ஒரு புதிய கட்டிடத்தை கட்டி அவ்விடம் பிரார்த்தனை தலைமுடி

எடுக்கிறார்கள். அவ்விடம் தலைமுடி எடுத்தால் தலை 1-க்கு 0-06 ந.பை. வீதம் வேங்கடேஸ்வரருக்கு சேரும். நீங்கள் செலுத்தும் முடி தலை 1-க்கு 0-25 ந.பை. முதல் ரூ. 5-00 வரையில் விலை போகும். இப்படி யாத்ரீகர்கள் செலுத்தும் தலைமுடியால் சுவாமிக்கு சில ஆயிரம் ரூபாய்கள் வருமானம் வரும். மொத்த வருமானத்தில் 100-க்கு 25 சதவீதம் சுவாமிக்குசேரும் தலைமுடி நீங்கள் ஒவ்வொருவருக்கும் 0-25 ந.பை. வீதம் செலுத்தி டிக்கட்டுகள் பெற்றுக் கொள்ள வேண்டும். சுமார் 9,10வருஷமாய் இதேப்போல் தேவஸ்தானத்தார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனதால் இவ்விடத்தில் தலைமுடி செலுத்துவது உத்தமம்.

திருமலையில் இன்னும் அநேக இடங்களில் தலைமுடி எடுக்கின்றனர். அவர்கள் திருமலை பஞ்சாயத்து ஆரோக்கிய இலாகா அதிகாரியின் அனுமதி பெற்று வருஷம் ஒன்றுக்கு ரூ. 75-00 செலுத்தி லைசென்ஸ் பெற்று தலைமுடி எடுப்பார்கள். தனியாய் தலைமுடி எடுப்பவர்களும் மேற் சொன்ன கல்யாணகட்ட சங்கத்தில் சேர்ந்தவர்கள். இவர்களுக்குள் ஒற்றுமை இல்லாததால் சுமார் 45 வருஷமாய் வேறு இடங்களில் தலைமுடி எடுக்கிறார்கள் தனி இடங்களில் ஆள் 1-க்கு 0-06 ந.பை. வீதம் முடி எடுப்பார்கள். ஆனால் கல்யாணகட்டத்தில் மாத்திரம் 0-25 ந.பை வீதம் தலைக்குப் பெற்றுக் கொள்கிறார்கள். இந்த இடங்களில் எங்கு வேண்டுமானாலும் தலைமுடிசெலுத்தலாம். தலைமுடி செலுத்தி

சுவாமி கோவிலுக்கு வடக்கு பாகத்தில் சுவாமி புஷ்கரணி என்னும் குளத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். அவ்விடம் தீர்த்தவாசிகளான புரோகிதர்களிடம் சங்கல்பம் முதலான மத சடங்கள் செய்துக் கொண்டு அவர்களுக்கு தங்களிஷ்டப்படி தானதர்மங்கள் செய்யலாம். தாங்கள் கொடுக்கும் தானதர்மங்களிருந்து சுவாமி புஷ்கரணியை சுத்தம் செய்யும் செலவு போக மீதியில் சுமார் 60 குடும்பத்தார்கள் ஜீவிக்கின்றனர். நீங்கள் ஸ்நான சங்கல்பங்கள் முடித்துக் கொண்டு சுவாமி புஷ்கரணிக்கு வடக்கு பாகத்தில் கிருதயுகத்தில் ஹிரண்யாக்ஷனைக் கொன்று பூதேவியை ரக்ஷிக்க அவதரித்த ஆதி வராஹ சுவாமி கோவில் உள்ளது அவரை தரிசிப்பது க்ஷேத்திர தர்மம் ஆனல் அது எப்போது வேண்டுமானலும் போய் தரிசிக்கலாம் அந்த கோவில் காலே 7-மணி முதல் இரவு 9-மணி வரையில் திறந்திருக்கும்.

ஸ்ரீனிவாசன் வைகுண்டத்தை விட்டு இந்த க்ஷேத்திரத்திற்கு வந்தபோது ஸ்ரீனிவாசன் நிவசிக்க ஆதிவராஹமூர்த்தியே இடம் கொடுத்ததினல் தரிசனம், பூஜை, நிவேதனம் முதலியவைகள் முதலில் நடக்க ஏற்பாடு செய்திருக்கிருர்கள். அதேப்போல் இப்போதும் முதல் பூஜை, நிவேதனம் முதலியவை வராஹ மூர்த்திக்கு நடத்தி, பிறகு வேங்கடேஸ்வரருக்கு ஆராதனைகள் நடக்கின்றன. இந்த காரணத்தினல் முதலில் வராஹ சுவமியை தரிசிப்பது ஆசாரமானதால் முதலில் அங்கு சென்று தரிசிக்க வேண்டும். இப்படி வராஹமூர்த்தியை தரிசித்து,

பிறகு சுவமிக்கு செலுத்த வேண்டிய காணிக்கை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோவிலில் பங்காரு வாகிலிக்கு வடக்கு பாகத்தில் வைத்திருக்கும் ஹுண்டியில் போடவேண்டும். அல்லது சுவாமிக்கு பாத கானிக்கையாக செலுத்துபவர் அவ்விடமே இருக்கும் தேவஸ்தானம் ஆபீஸ் பேஷ்கார் என்னும் உத்யோகஸ்தரிடம் தெரிவித்தால் அவர் பணத்தைப் பெற்றுக் கொண்டு உடனே ரசீது கொடுப்பார். இப்படி பாத காணிக்கையாக செலுத்தி ரசீது பெற்ருலும், அல்லது ஹுண்டியில் பேட்டாலும் அந்த காணிக்கைகள் சுவாமிக்கு சேரும். இப்படி யில்லாமல் வேறு இடங்களில் கொடுத்தால் அது சுவாமிக்கு சேராது.

ஸ்ரீ வேங்கடேஸ்வரர் ஆலயம் பிரதி தினமும் காலே 4–30 மணிக்கு திறக்கப்பட்டு சுவாமி சன்னதி யில் பிரவேசித்து அவ்விடம் காலேயில் செய்ய வேண்டியவைகளே செய்து முடித்து மைசூர் மஹா ராஜாவின் நவநீதஹாரதி செய்வார்கள். பிறகு சர்கார் ஹாரதி செய்யும் சமயத்தில் ஸுப்ரபாதம் பாரயணம் செய்த பிறகு தரிசனம்

## தர்ம தரிசனம், விஸ்வரூப தரிசனம்

இந்த தரிசனங்கள் காலே $4\frac{1}{2}$ மணி முதல் 6 மணி வரைவில் நடக்கும். இந்த தரிசனத்திற்குப் போகிற வர்கள். காலே 4 மணிக்கே ஸ்நானம் செய்து கோவி லுக்குச்சென்று அவ்விடத்திலிருந்து "க்யூ" வரிசை யில் ஒருவர்பின் ஒருவருய் தரிசிக்கலாம்.

## கொலுவு சேவை

இந்த சேவை காலை சுமார் 10 மணிக்கு நடக்கும் கொலுவு ஸ்ரீனிவாசமூர்த்தியை பங்காரு வாகிலி யிடம் எழுந்தருளச் செய்து பிரதி தினமும் பக்தர் கள் செலுத்தும் பணம், நகை, வஸ்திரங்கள் முதலியவைகளை எழுதியுள்ள கணக்கை படித்து பிறகு பஞ்சாங்கஸ்ரவணம் செய்வார்கள். பக்தர் கள் இந்த சேவையை வெளியிருந்து பார்க்கலாம்.

## முதல் ஆராதனை

மாத்தியானம் 12 மணிக்கு ஆராதனை நடக்கும். இந்த சமயத்தில் ஸ்ரீவாரி பங்காரு வாகிலிக்கு (பொன் வாசல் படிக்கு) தெற்கு திசையில் இருக் கும் இரண்டு பெரியமணிகளை அடிப்பார்கள். அப் போது ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமிக்கு நைவேத்தியம் நடக்கும்.

## சாத்துமுறை

இந்த சாத்துமுறை முதல் நிவேதனம் (முதல் மணி) ஆனதும் பகல் 12-30 மணிக்கு நடக்கும். இந்த சேவையை ஸ்ரீ வைஷ்ணவ பிராம்மணர்கள் மட்டும் சேவிக்கலாம்.

## தர்ம தரிசனம்

பகல் சுமார் 12 மணிக்கு நடக்கும். அந்த தரிசனத்திற்கு ஒவ்வொருவரும் வரிசையாய் ஒருவர்பின் ஒருவராய் க்யூ வரிசையில் சென்று ஸ்ரீனிவாச ஸ்வாமியை தரிசித்து தீர்த்தம் சடாரி பெற்றுக்கொண்டதும் பங்காருவாகிலியிடம் ஸ்வாமி

யின் பிரசாதங்கள் கொடுக்கப்படும். அவ்விடம் பிரசாதங்கள் பெற்றுக்கொள்ளலாம். ஆனல் இந்த தர்ம தரிசனம் மாலே 6 வணி வரைக்கும் நடக்கும்.

### இரண்டாவது நிவேதனே

இரண்டாவது நிவேதனே மாலே சுமார் 1 மணிக்கு நடக்கும். இந்த சமயத்தில் தரிசனமில்லே சுவாமிக்கு நைவேத்தியம் மட்டும் செய்யப்படும். ஆனல் இந்த நைவேத்தியம் வெள்ளிக்கிழமை மாத்திரம் மாலே 5 மணிக்கு நடந்து வந்தது. இப்போது 12 மணிக்கே ஆய்விடும்.

### ஆர்ஜித தரிசனங்கள்

பணம் செலுத்திடிகட்டுகள் பெற்று தரிசிப்பது.

### தோமலே சேவை

இந்த தோமாலே சேவை பிரதி தினம் காலே 10-30 மணிக்கு நடக்கும், இந்த சேவை செய்பவர்கள் ரூ. 13-00 தேவஸ்தானம் ஆபீஸில் கட்டி டிகட்டு பெற்று இந்த டிகட்டின் பேரில் 5 பேர் சுவாமியை தரிசிக்கலாம். இந்த சேவையில் சுவாமிக்கு புஷ்பங்களினல் அலங்காரம் நடக்கும். சுவாமியை ஆனந்தமாய் சேவிக்கலாம். 10 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு டிகட்டில்லே.



## கெலுவு சேவை

இந்த சேவை காலை சுமார் 10 மணிக்கு நடக்கும் கொலுவு ஸ்ரீனிவாசமூர்த்தியை பங்காரு வாகிலி யிடம் எழுந்தருளச் செய்து பிரதி தினமும் பக்தர் கள் செலுத்தும் பணம், நகை, வஸ்திரங்கள் முதலியவைகளை எழுதியுள்ள கணக்கை படித்து பிறகு பஞ்சாங்கஸ்ரவணம் செய்வார்கள். பக்தர் கள் இந்த சேவையை வெளியிருந்து பார்க்கலாம்.

## முதல் ஆராதனை

மாத்தியானம் 12 மணிக்கு ஆராதனை நடக்கும். இந்த சமயத்தில் ஸ்ரீவாரி பங்காரு வாகிலிக்கு (பொன் வாசல் படிக்கு) தெற்கு திசையில் இருக் கும் இரண்டு பெரியமணிகளை அடிப்பார்கள். அப் போது ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமிக்கு நைவேத்தியம் நடக்கும்.

## சாத்துமுறை

இந்த சாத்துமுறை முதல் நிவேதனம் (முதல் மணி) ஆனதும் பகல் 12-30 மணிக்கு நடக்கும். இந்த சேவையை ஸ்ரீ வைஷ்ணவ பிராம்மணர்கள் மட்டும் சேவிக்கலாம்.

## தர்ம தரிசனம்

பகல் சுமார் 12 மணிக்கு நடக்கும். அந்த தரிசனத்திற்கு ஒவ்வொருவரும் வரிசையாய் ஒருவர்பின் ஒருவருய் க்யூ வரிசையில் சென்று ஸ்ரீனிவாச ஸ்வாமியை தரிசித்து தீர்த்தம் சடாரி பெற்றுக்கொண்டதும் பங்காருவாகிலியிடம் ஸ்வாமி

யின் பிரசாதங்கள் கொடுக்கப்படும். அவ்விடம் பிரசாதங்கள் பெற்றுக்கொள்ளலாம். ஆனால் இந்த தர்ம தரிசனம் மாலை 6 வணி வரைக்கும் நடக்கும்.

## இரண்டாவது நிவேதனை

இரண்டாவது நிவேதனை மாலை சுமார் 1 மணிக்கு நடக்கும். இந்த சமயத்தில் தரிசனமில்லை சுவாமிக்கு நைவேத்தியம் மட்டும் செய்யப்படும். ஆனால் இந்த நைவேத்தியம் வெள்ளிக்கிழமை மாத்திரம் மாலை 5 மணிக்கு நடந்து வந்தது. இப்போது 12 மணிக்கே ஆய்விடும்.

## ஆர்ஜித தரிசனங்கள்

பணம் செலுத்திடிகட்டுகள் பெற்று தரிசிப்பது.

## தோமலை சேவை

இந்த தோமாலை சேவை பிரதி தினம் காலை 10-30 மணிக்கு நடக்கும், இந்த சேவை செய்பவர்கள் ரூ. 13-00 தேவஸ்தானம் ஆபீஸில் கட்டி டிகட்டு பெற்று இந்த டிகட்டின் பேரில் 5 பேர் சுவாமியை தரிசிக்கலாம். இந்த சேவையில் சுவாமிக்கு புஷ்பங்களினால் அலங்காரம் நடக்கும். சுவாமியை ஆனந்தமாய் சேவிக்கலாம். 10 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு டிகட்டில்லை.



## (முதல் அர்ச்சனே) ஸஹஸ்ரநாம அர்ச்சனே

இந்த அர்ச்சனே காலே 11 மணிக்கு நடக்கும். இந்த அர்ச்சனே செய்பவர்கள் ரூ. 7-00 தேவஸ்தானம் ஆபீஸில் பணம் கட்டி டிகட்டு பெற்றுக் கொள்ள வேண்டும். டிகட்டு பெற்றவர்கள் சார்பில் 4 பேர் இந்த தரிசனம் செய்யலாம். ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் சஹஸ்ர நாமங்கள் சொல்லி துளசி தளத்தால் அர்ச்சனே செய்வார்கள். சுமார் அரைமணி நேரம் பிடிக்கும். அர்ச்சனே டிகட்டு பெற்றவர்களுக்குத் தனித் தனியாய் அர்ச்சனே செய்வதில்லே. எல்லோருக்கும் சேக்ந்து ஒரே அர்ச்சனே செய்யப்படும். கடைசியில் அவரவர்கள் கோத்திரங்கள், பெயர்கள் சொல்லி ஆசீர்வாதங்கள் செய்வார்கள்.

## (இரண்டாவது அர்ச்சனே)
## அஷ்டோத்திர சதநாம அர்ச்சனே

இந்த அர்ச்சனே பகல் சுமார் 3-30 மணிக்கு நடக்கும். இந்த அர்ச்சனேக்கு செல்லுபவர்கள் ரூ. 7-00 தேவஸ்தானம் ஆபீஸில் செலுத்தி டிகட்டு பெற வேண்டும். ஒவ்வொரு டிகட்டுக்கும் 4 பேர் மாத்திரம் சேவிக்க அனுப்புவார்கள். அர்ச்சனேயின்போது சுவாமியின் 108 நாமங்கள் சொல்லி துளசியால். அர்ச்சனே செய்வார்கள். அர்ச்சனே நடந்த பிறகு கோத்திரம், பெயர் சொல்லி ஆசீர்வாதங்கல் நடக்கும். குருவாரம் (வியாழக்கிழமை) இந்த சமயத்தில் பகவானின் நேத்திர தரிசனம் செய்யலாம்.

—*****—

## ஏகாந்த சேவை

இந்த சேவை பிரதி தினம் இரவு தர்ம தரிசனம் ஆன பிறகு சுமார் 9 மணிக்கு சுவாமிக்கு பான்பு சேவை நடக்கும். இந்த சேவையை பார்க்க ரூ. 13 கொடுத்து தேவஸ்தான ஆபீஸில் டிக்கட்டு பெற்றுக் கொண்டு டிகட்டு ஒன்றுக்கு 5 பேர் விதம் சென்று தரிசிக்கலாம். சுவாமி ஆலயத்தில் வெள்ளி ஊஞ்சலின்மேல் போக ஸ்ரீனிவாசரை ஸமனிக்கச் செய்து பால், பழம், தாம்பூலம் முதலான வைகள் நிவேதனம் செய்து பரம பக்த சிரோமணியான தரிகொண்ட வேங்கமாம்பாள் அவர்களின் முத்து ஹாரதி செய்வார்கள். பிறகு சுவாமிக்கு ஆராதனை செய்த பால், தாம்பூலம் முதலானவைகள் எல்லோருக்கும் கொடுப்பார்கள். பிரதி தினம் 9 மனிக்கு சுவாமி காரியங்கள் நடந்து தீர்மானம் நடக்கும்.

## பூலங்கி தரிசனம்

இந்த பூலங்கி தரிசனம் பிரதி வியாழக்கிழமை சுமார் இரவு 8 மணிக்கு நடக்கும். விசேஷமான புஷ்பங்களால் அலங்காரம் செய்வார்கள். இந்த தரிசனத்திற்கு போகிறவர்கள் ரூ. 1-00 டிக்கட்டு தேவஸ்தான ஆபீஸில் செலுத்தி அந்த தரிசனம் செய்யலாம். வெள்ளிக்கிழமை காலே விஸ்வரூப தரிசனம் கிடைக்கும் (இது தர்ம தரிசனம்)

## அபிஷேக தரிசனம்

இந்த அபிஷேகம் பிரதி வெள்ளிக்கிழமை காலே 8 மணிக்கு ஆரம்பமாகும். அபிஷேக தரிசனம் செய்ய வர்கள் ரூ, 1-00 செலுத்தி தேவஸதான ஆபீஸில்

டிக்கட் பெற்றுக் கொண்டு அபிஷேக தரிசனம் செய்யலாம். இந்த அபிஷேகம் சுமார் 1 மணி நேரம் நடக்கும். 2-வது நிவேதனம் ஆனதும் மாலை 5 மணிக்கு தர்ம தரிசனமாகும். இந்த தரிசன வகைகள் சுவாமிக்கு நடக்க வேண்டிய காரியங்களை அனுசரித்து சற்று முன் பின்னாக நடக்கும்.

## கற்பூர ஹாரதி

சுவாமிக்கு கற்பூர ஹாரதி செய்பவர்கள் தர்ம தரிசனத்திற்கு போகும் போது ரூ. 1-00 கொடுத்து தேவஸ்தான ஆபீஸில் ரசீது பெற்றுக் கொண்டு போய் கொடுத்தால் சுவாமிக்கு ஹாரதி செய்வார்கள். தோமாலை சேவை, அர்ச்சனை சமயங்களில் ஹாரதி செய்ய வேண்டியவர் ரூ. 1-00 கொடுத்து டிக்கட் பெற்றுக் கொண்டு ஹாரதி செய்யலாம். கற்பூரஹாரதி டிகட்டுகள் சமயானுகூலமாய் விற்கப்படும்.

## கற்கண்டு முதலானவைகள் நைவேத்தியம் செய்வித்தல்

யாத்ரிகர்கள் சுவாமிக்கு கற்கண்டு, திராக்ஷை, முந்திரி, பாதாமி, சர்க்கரை முதலானவைகள் நைவேத்தியம் செய்வார்கள். பஜாரில் ஒவ்வொரு வஸ்துவையும் எவ்வளவு விலை கொடுத்து வாங்கப்படுகிறதோ அவ்வளவு தொகையை தேவஸ்தான ஆபீஸில் செலுத்தி ரசீதி பெற்று தர்மதரிசனத்தின் போது மூலஸ்தானம் சென்று ரசீதை காட்டினால் நிவேதனம் செய்துக் கொடுப்பார்கள்.

## சுவாமிக்கு நகைகள், வஸ்திரங்கள் சமர்ப்பித்தல்

யாத்ரீகர்கள் நகைகள், வஸ்திரங்கள், மாடுகள் யானை, எருது, குதிரை முதலானவைகளை கொடுப்ப தாயிருந்தால் அவற்றின் மதிப்பிற்கு சரியான தொகையை தேவஸ்தான ஆபீஸில் கொடுத்து ரசீது பெறவேண்டும். இப்படி கொடுக்கப்பட்டவை மாத்திரம் சுவாமிக்கு உபயோகப்படுத்தப்படும். பாதகாணிக்கையாகவும், ஹுண்டியில் போட்ட நகைகளும், வஸ்திரங்களும் சுவாமிக்கு சமர்பிப்ப தில்லை. அப்படிப்பட்டதை விற்றுவிடுவார்கள்.

## நித்ய துளசி அர்ச்சனை

சுவாமிக்கு நித்ய துளசி அர்ச்சனை செய்பவர் கள் தேவஸ்தான ஆபீஸில் முதல் வருஷத்திற்கு ரூ 84-00 செலுத்த வேண்டும். பிறகு பிரதி வருஷ மும் ரூ.42 வீதம் செலுத்தி வரவேண்டும். இப்படி செலுத்துபவர்கள் பெரிய வேங்கடேஸ்வரருக்கு நித்யமும் துளசி அர்ச்சனை நடக்கும். இந்த துளசி அர்ச்சனை யார் பேரில் நடக்கிறதோ அவர்கள் இவ் விடம் வந்த போது ஒரு நாள் அவர்கள் குடும்பத் துடன் பகவானை சேவிக்கலாம். தரிசனம் ஆன பிறகு அவர்களை ஆசீர்வதிப்பார்கள்.

## நித்ய நவநீத ஹாரதி

சுவாமிக்கு நித்ய நவநீத ஹரதி செய்பவர்கள் முதலில் ரூ. 84-00 செலுத்தவேண்டும். பிறகு ஒவ் வொரு வருஷமும் ரூ.42 00 செலுத்தி வரவேண்டும்.

இப்படி செலுத்தியவர் பேரில் நவநீத ஹாரதி செய்யப்படும். பிரதி தினமும் வெண்ணை, சர்க்கரை, தாம்பூலங்களுடன் ஹாரதி செய்யப்படும்.

### நித்ய கற்பூர ஹாரதி

சுவாமிக்கு நித்ய கற்பூர ஹாரதி செய்பவர்கள் முதலில் ரூ. 42-00 தேவஸ்தான ஆபீஸில் செலுத்தி பிறகு ஒவ்வொரு வருஷமும் ரூ. 21-00 செலுத்தி வரவேண்டும். இப்படி செலுத்தியவர்கள் பேரில் பிரதி தினமும் கற்பூர ஹாரதி செய்யப்படும். ஆனல் அந்தந்த வருஷத்தில் ஒரு வாரம் முன்னதாக பணம் வந்து சேரும்படி அனுப்பவேண்டும்.

### பிரதி வெள்ளிக்கிழமையும் சுவாமி அபிஷேகத்திற்கு பால் சமர்ப்பித்தல்

சுவாமி அபிஷேகத்திற்கு பால் சமர்ப்பிக்க இஷ்டப்பட்டவர்கள் ஒரு படி பாலுக்கு ரூ.1-50 வீதம் ஒரு வருஷத்திற்கு ஆகும் மொத்தத்தை தேவஸ்தான ஆபீஸில் சேலுத்தவேண்டும். இப்படி செலுத்துபவர் பேரில் ஒவ்வொரு வாரமும் அபிஷேகத்திற்கு ஒரு சேர் பால் சப்ளை செய்யப்படும். ஆனல் ஒரு சேர் முதல் எத்தனை சேர் இஷ்டமோ அத்தனை சேர் பாலுக்கு ஒரு வருஷப்பணம் முன்னதாக செலுத்த வேண்டும். எத்தனை வருஷம் அனுப்பினுலும் அத்தனை வருஷம் பால் அபிஷேகத்திற்கு சப்ளை செய்வார்கள்.



### பிரசாதங்கள் நைவேத்யம் செய்வித்தல்

| | | |
|---|---|---|
| ஷீரா (ரவை ஹல்வா) | ரூ. | 160 |
| கேசரிபாத் | ,, | 125 |
| சாகர்பாத் | ,, | 120 |
| பாயசம் | ,, | 80 |
| சக்கரை பொங்கள் | ,, | 60 |
| புளியோதரை (சித்ரான்னம்) | ,, | 60 |
| தத்யோதனம் (தயிர் சாதம்) | ,, | 56 |

மேல் கண்ட பிரசாதங்கள் சுவாமிக்கு நைவேத்யம் செய்வாகள். ஒவ்வொன்றுக்கும் நிர்ணயிக்கப் பட்ட கட்டணத்தை தேவஸ்தான ஆபீஸில் செலுத்த வேண்டும். நீங்கள் கோரிய பிரசாதங்கள் சுவாமிக்கு நைவேத்யம் செய்து பிறகு அப்படியே உங்களுக்கு கொடுத்து விடுவார்கள்.

### பணியாரங்கள்

| | | |
|---|---|---|
| லட்டு | ரூ. | 125 |
| ஜிலேபி | ,, | 125. |
| வடை | ,, | 85 |
| மனோஹரம் | ,, | 70 |
| சுகியம் | ,, | 60 |
| அப்பம் (அதிரசம்) | ,, | 60 |
| தேன்குழல் | ,, | 55 |
| தோசை | ,, | 50 |
| போளி | ,, | 45 |

சுவாமிக்கு மேல்கண்ட பணியாரங்களை நைவேத்யம் செய்ய விரும்புகிறவர்கள் அவைகளுக்கு நிர்ணயித்த கட்டணத்தை தேவஸ்தான ஆபீஸில்

செலுத்தினால் நீங்கள் கோரியது சுவாமிக்கு நைவேத்யம் செய்து ஒவ்வொரு ஜடத்திற்கு 30 வீதம் பணம் கட்டியவர்களுக்கு கொடுத்து விடுவார்கள்.

### வாஹன சேவை செய்விப்பவர்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| சர்வபூபால | வாஹனம் | வஜ்ரகவசத்துடன் | ரூ. | 72 |
| கற்பகவிருக்ஷ | ,, | ,, | ,, | 72 |
| தங்க கருட | ,, | ,, | ,, | 62 |
| பெரிய சேஷ | ,, | பொன் | ,, | 62 |
| சர்வபூபால | ,, | | ,, | 62 |
| பல்லகி ” | த்ஸவம் | | ,, | 62 |
| சூர்யபிரப | ,, | | ,, | 62 |
| சந்திரபிரப | ,, | | ,, | 62 |
| வெள்ளி கருட | ,, | | ,, | 32 |
| சின்ன சேஷ | ,, | வெள்ளி | ,, | 32 |
| யானை | ,, | ,, | ,, | 32 |
| குதிரை | ,, | ,, | ,, | 32 |
| சிம்ம | ,, | ,, | ,, | 32 |
| ஹம்ஸ (அன்னம்) | | ,, | ,, | 32 |
| வெள்ளித்திருச்சி | | ,, | ,, | 32 |

ஒவ்வொரு வாஹனத்திற்கும் ரூ. 1 ஹாரதிக்கு தனியாக செலுத்த வேண்டும். இந்த உத்ஸவங்கள் செய்விப்பவர்கள் மேற் கண்ட விதம் தேவஸ்தானம் ஆபீஸில் பணம் செலுத்தி ரசீது பெறவேண்டும். இந்த உத்ஸவம் செய்பவர்களுடைய கையில் ஒரு வெள்ளிக்கோலை கொடுத்து, சுவாமியுடன் திருவீதிகளில் ஊர்வலம் வந்து உத்ஸவம் செய்பவர்களுக்கு வடையோ, அல்லது மனோஹரமோ வெகுமானமாய் கொடுப்பார்கள்.

## அமந்தரஞ்ஜோத்ஸவம்

இந்த உத்ஸவம் செய்பவர்கள் தேவஸ்தான ஆபீஸில் ரு. 100 செலுத்து ரசீது பெற்றுக்கொள்ள வெண்டும், இந்த பணத்தை கட்டி உத்ஸவம் செய்பவர்களுக்கு பொங்கல், தோசை, வகைரா பிரசாதங்கள் கொடுக்கப்படும். ஹாரதிக்கு ரூ. 1-00 செலுத்த வேண்டும்.

## பூலங்கி சேவை

சுவாமிக்கு பூலங்கி சேவை செய்பவர்கள் வியாழக்கிழமை அன்று ரூ. 60-00 தேவஸ்தான ஆபீஸில் கட்டி ரசீது பெற்றுக் கொண்டால் அன்று இரவு சுமார் 8 மணிக்கு 10 பேர் போய் சுவாமியை தரிசிக்கலாம். அன்று நடக்கும் புஷ்ப கைங்கர்யம் பணத்தை செலுத்தியவர்களுடையதாய் பாவிக்கப்படும். ஹாரதிக்கு தனியாக ஒரு ரூபாய் செலுத்த வேண்டும்.

## சுவாமிக்கு அபிஷேகம் செய்வித்தல்

இந்த அபிஷேகம் சுவாமிக்கு பிரதி வெள்ளிக் கிழமை நடக்கும். இந்த அபிஷேகம் செய்பவர்கள் ரூ 450 தேவஸ்தான ஆபீஸில் கட்டி ரசீது பெற வேண்டும். அன்று நடக்கும் அபிஷேகம் பணம் கட்டியவர்கள் செய்வித்ததாய் பாவிக்கப்படும். அவர்கள் அன்றய தினம் நடக்கும் எல்லா சேவைகளையும் சேவிக்கலாம். வடை, லட்டு, தோசை, அப்பம் முதலிய பிரசாதங்களுடன் வஸ்திர வெகுமானமும் பெற்றுக் கொள்ளலாம். ஹாரதிக்கு ரூபாய் ஒன்று தனியாக செலுத்த வேண்டும்.

## ஸஹஸ்ர கலஸாபிஷேகம்

இந்த அபிஷேகம் செய்பவர்கள் 1,500 தேவஸ்தான ஆபிஸில் செலுத்தி ரசீது பெற வேண்டும். அன்று நடக்கும் ஸஹஸ்ர கலஸாபிஷேகம் பணம் கட்டியவர்கள் செய்வித்ததாய் பாவிக்கப்படும். பங்காரு வாகிலியிடம் (பொன் வாசற்படியில்) 1,000 சிறிய வெள்ளிச்சொம்புகளால் தீர்த்தம் நிறப்பி சாஸ்திர முறைப்படி ஹோமாதி காரியங்கள் நடத்தி அந்த 1000 சொம்புகளிலுள்ள தீர்த்தத்தினுல் சுவாமிக்கு அபிஷேகம் செய்யப்படும். இந்த உத்ஸவத்தை அநேக பக்தர்கள் சேவிக்கின்றனர்கள். இந்த உத்ஸவம் செய்பவர்கள் அன்று நடக்கும் பிரதி தரிசனத்தையும் ஆனந்தமாய் தரிசிக்கலாம் வடை, லட்டு, அப்பம் தோசை முதலிய பிரசாதங்களுடன் வஸ்திர வெகுமானமும் கொடுக்கப்படும்.

## கல்யாண உத்ஸவம்

ஸ்ரீனிவாச ஸ்வாமி விவாஹ மஹோத்ஸவம் செய்பவர்கள்ரூ.500 தேவஸ்தான ஆபீஸில்செலுத்தி ரசீது பெற்ருல் இந்த கல்யாண உத்ஸவம் செய்வார்கள். உத்ஸவமான பிறகு வடை, லட்டு, அப்பம், தோசை முதலிய பணியாரங்களும், பொங்கல் முதலான பிரசாதங்களும் வஸ்திர் வெகுமானங்களுடன் நீங்கள் இறங்கி யிருக்குமிடத்திற்கு மங்கள வாத்தியங்களுடன் அழைத்து வந்து விடுவார்கள்..

## வசந்த உத்ஸவம்

இந்த உத்ஸவம் செய்விப்பவர் ரூ. 2000 தேவஸ்தான ஆபிஸில் செலுத்தவேண்டும். 10 நாட்கள் இந்த உத்ஸவம் நடக்கும். இந்த 10 நாட்களில்

நடக்கும் சேவைகளை தரிசனம் செய்யலாம். பிரதி தினமும் பிரசாதங்கள் வெகுமானமாய் கொடுக்கப் படும். பத்தாம் நாள் சந்தனம், ஸ்ரீபாதரேணுவுடன் வஸ்திர வெகுமானமும் பெறலாம்.

### சுவாமிக்கு பரிமள திரவ்யங்கள் சமர்பித்தல்

| | | |
|---|---|---|
| கற்பூர கிண்ணம் | ரூ. | 250 |
| புனுகு சட்டம் கிண்ணம் | ,, | 85 |
| ஜாப்ரா கிண்ணம் | ,, | 65 |
| கஸ்தூரி கிண்ணம் | ,, | 50 |

இந்த நான்கு பரிமள திரவ்வியங்களும் சமர் பிக்க கோரியவர்கள் மேல் கண்ட கட்டணத்தை தேவஸ்தான ஆபீஸில் செலுத்த வேண்டும். வெள்ளிக்கிழமை சுவாமிக்கு அபிஷேக சமயத்தில் இந்த பரிமள திரவ்வியங்களை உபயோகிப்பார்கள்.

### திருப்பாவாடை
### (சுவாமிக்கு அன்னராசி போடுதல்)

இந்த திருப்பாவாடை இரண்டு ரகங்கள். முதல் ரகத்திற்கு ரூ 2000 இரண்டாவது ரகத்திற்கு ரூ.1000 கட்ட வேண்டும். முதற் ரகத்திற்கு 20 மூட்டை அரிசியும், இரண்டாவது ரகத்திற்கு 10 மூட்டை அரிசியும் சமையல் செய்து தங்க வாசல் முன் அன்ன ராசி கும்பம் மாதிரி போடுவாகள். அப்படி போட்டு சுவமிக்கு நைவேத்யம் செய்து தறகு எல்லோரும் பேதமில்லாமல் அந்த பிரசாதத்தை பெறுவார்கள். இந்த உத்ஸவம் செய்பவர்கள் அன்று எல்லாசேவை களையும் .பார்க்கலாம். வடை,லட்டு, சந்தனம், ஸ்ரீபாதரேணு,வஸ்திரம் வெகுமானம் செய்வார்கள்

## கோவிலாழ்வார் திருமஞ்சனம்

இந்த திருமஞ்சனம் செய்விப்பவர்கள் ரூ 500 செலுத்த வேண்டும். அன்றய தினம் சுவாமி சன்னதியை நன்ருய் சுத்தம் செய்து பரிமள திரவ்வியங்களுடன் கற்பூரம், சந்தனமும் சேர்ந்து வாசனையுடன் ஆலயம் முழுவதும் தெலிப்பார்கள் இந்த உத்ஸவம் செய்பவர்களுக்கு வடை, லட்டு, அப்பம், தோசை முதலிய பிரசாதங்களும், வஸ்திர வெகுமானமும் கிடைக்கும்.

## பிரம்மோத்ஸவம்

இந்த பிரம்மோத்ஸவம் இரண்டு ரகங்கள். முதல் ரக உத்ஸவத்திற்கு ரூ. 1500 இரண்டாவது ரக உத்ஸவத்திற்கு ரூ. 750 செலுத் 5 வேண்டும். முதல் ரகம் செய்விப்பவர்களுடன் 20 பேரும், இரண்டாவது ரக உத்ஸவம் செய்விப்பவர்களுடன் 10பேர்களும் பிரதி தினம் நடக்கும் அர்ச்சனை, தோமாலை சேவை, அபிஷேகம், பூலங்கி தரிசனம் முதலானவைகளை தரிசிக்கலாம். இப்படி 8 அல்லது 9 நாட்கள் பார்க்கலாம். இந்த 8 அல்லது 9 நாட்களும் பிரசாதங்கள் கொடுப்பார்கள். கடைசி நாள் பிரசாதங்களுடன் வஸ்திர வெகுமானமும் செய்து ஆசிர்வதிக்கப்படும். ஹாரதிக்கு ஒரு ரூபாய் தனியாக செலுத்த வேண்டும்.



## தீர்த்த மஹாத்மியங்கள்

இந்த க்ஷேத்திரத்தில் 364 தீர்த்தங்கள் இருப்பதாய் புராணங்களில் சொல்லப்படுகின்றது. அந்த தீர்ததங்கள் மனிதருக்கு கோசர மாகாததால் இவ்விடமுள்ள முக்யமான தீர்த்தங்களின் மஹிமை பிரகாசிக்கின்றது. அவைகள் வருமாறு :—

| | | | |
|---|---|---|---|
| ஆகாசகங்கை | தீர்த்தம் | ஸனகஸனந்தன | தீர்த்தம் |
| வைகுண்ட | ,, | சக்ர | ,, |
| ஜாபாலி | ,, | துருவ | ,, |
| பாபவினசன | ,, | பாண்டவ (கோகர்ப தீர்த்தம்) | ,, |
| குமாரதாரை | ,, | இராமகிருஷ்ண | ,, |
| சேஷ | ,, | தும்புரு | ,, |
| யுத்தகள | ,, | சீதம்ம | ,, |

இந்த தீர்த்தங்கள் பிரசித்தி பெற்றிருக்கின்றன. ஆனல் மேற் சொன்ன 364 தீர்த்தங்களும், வைகுண்ட ஏகாதசி மறு நாள் துவாதசி யன்று ஸ்வாமி புஷ்கரணியில் சேருகிறது. அன்றிய தினம் சக்ரஸ்நானம் ஸ்வாமிபுஷ்கரணியில் நடக்கும். ஆகையால் பக்தர்கள் ஆயிரக் கணக்கில் சக்ரஸ்நானத்துடன் ஸ்நானம் செய்கிருர்கள்.

## ஸ்வாமி புஷ்கரணி மஹாத்மியம்

ஸ்லோகம்॥ ஸ்வாமி புஷ்கரணீ ஸ்நானம்
ஸத்குரோர் பாதஸேவனம் ।
ஏகாதசீ விரதம்சாபி
த்ரயமத்யந்த துர்லபம் ।

துர்லபம் மாநுஷம் ஜன்ம
துர்லபம் தத்ரஜீவனம் ।
ஸ்வாமி புஷ்கரணீ ஸ்நானம்
த்ரயமத்யந்த துர்லபம் ॥

இந்த புஷ்கரணி கிருதயுகத்தில் வைகுண்டத்தி லிருந்து கருடனால் கொண்டு வரபெற்று கிரீடாத்ரி யில் யிருப்பதால் பிரம்மாதி தேவர்கள், தசரதன், பஞ்சபாண்டவர்கள், அஞ்சனாதேவி, இந்திராதி தேவர்கள் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, அவரவர்கள் கோரிக்கைகள் ஈடேரியதாலும் கலி யுகத்தில் பக்தர்கள், பாகவதர்கள், கிருஹஸ்தர் கள், பண்டிதர்கள், பாமரர்கள் இந்த புஷ்கரணியில் ஸ்நானம் செய்து சந்ததி இல்லாதவர்கள் சந்ததி பெற்றும், தரித்திரர்கள் ஐஸ்வர்யத்தையும், பக்தர் கள் மோக்ஷத்தையும், தேவர்கள் சுவர்க்கத்தையும் பெருவதால் இந்த தீர்த்த பிரபாவம் ஆதிசேஷனா லும் வர்ணிக்க முடியாதென்று புராணங்களில் சொல்லப்படுகின்றது. யாத்ரையாய் வரும் பக்தர் களனைவரும் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வது முக்கியம்.

### பாபவிநாசன தீர்த்தம்

சுவாமி ஆலயத்திற்கு வடக்கு திசையில் சுமார் 3 மைல் தூரத்தில் இருக்கிறது.

### ஆகாச கங்கை தீர்த்தம்

சுவாமி ஆலயத்திற்கு வடக்கு திசையில் பாப விநாசனம் போகும் வழியில் சுவாமி ஆலயத்திற்கு 2 மைல் தூரத்தில் இருக்கிரது.

## கோகர்பம் என்கிற பாண்டவ தீர்த்தம்

சுவாமி ஆலயத்திற்கு வடகிழக்கு திசையில் சுமார் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது.

திருப்பதிக்கு வரும் யாத்ரீகர்கள் இந்த மூன்று தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்வது வழக்கம்.

மேற்கண்ட மூன்று தீர்த்தங்களுக்குப் போக என்னியவர்கள் காலை 5 மணிக்கு புறப்பட்டுச் சென்று முதலில் பாபவினச தீர்த்ததில் ஸ்நானம் செய்து பிறகு அதே வழியிலுள்ள ஆகாசகங்கை யில் ஸ்நானம் செய்ய வேண்டும். மூன்ருவது ஊருக்கு சமீபத்திளுள்ள கோகர்பம் என்னும் பாண்டவ தீர்த்தம் சென்று அங்கே ஸ்நானம் செய்ய வேண்டும். இந்த மூன்று தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து 10 மணிக்குள் திருமலைக்கு வந்துவிடலாம். பாபவினசனம் தீர்த்தத்தினிடம் காபி ஹோட்டல் முதலானவைகளுமுண்டு. வழியில் எந்த விதமான பயமும் இல்லை. அவ்விடம் சங்கல்பம் முதலானவை செய்விக்க தீர்த்தவாசிகள் (புரோஹிதர்கள்) இருப் பார்கள். (பஸ்ஸிலும் போகலாம்)

## ஜாபாலி தீர்த்தம்

சுவாமி ஆலயத்திற்கு வடமேற்கு திசையில் சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ளது. அவ்விடம் ஜாபாலி மஹரிஷி தவம் புரிந்து முக்தி பெற்ற புண் ணியதீர்த்தம். இங்கே ஓர் பெரிய ஆஞ்சநேயர் ஆலய மும், அஞ்சனதேவி தீர்த்தமும் இருக்கிறது. ஆஞ்ச நேயர் ஆலயத்திற்குப்பின் பாகத்தில் துருவ தீர்த்த மும் இருக்கின்றது. அந்த ஆஞ்சநேயர் ஆலயத்தை

திருமலே ஸ்ரீ ஹத்திராம்ஜீ மடத்தார் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு தினமும் பூஜை வகைராக்கள் நடத்தி வருகின்றனர். இவ்விடத்திற்கு இந்துஸ்தானியாத்ரீகர்கள் விசேஷமாய் சென்று ஸ்நானம் செய்கின்றனர். கோடை காலத்தில் இவ்விடம் மிகவும் குளிர்ச்சியாகவும், மனேல்லாசமாக இருக்கும்.

## சக்ர தீர்த்தம்

சுவாமி ஆலயத்திற்கு வடமேற்கு திசையில் சுமார் ஒரு மைல் தூரத்திலுள்ளது. இந்த தீர்த்தத்திற்கு போகிறவர்கள் நன்ருல் வழி தெரிந்தவர்களே அழைத்துக் கொண்டு போகவேண்டும். ஒரு காலத்தில் இவ்விடம் தவம்செய்து வந்த பக்தர்களே அரக்கர்கள் ஹிம்சை செய்துக் கொண்டிருந்தார்கள். இந்த விஷயத்தை மஹாவிஷ்ணு அறிந்து, தன் சக்ராயுதத்தால் அவர்களே ஸம்ஹரித்து அந்த சக்ராயுதத்தை அங்கே ஸ்தாபித்து பக்தர்களே ரக்ஷித்ததால் இதற்கு சக்ர தீர்த்தம் என்று பெயர் விளங்கியது. பிரதி வருஷமும் அர்ச்சகர்கள், ஏகாங்கிகள், தேவஸ்தான ஆபீஸர்கள் மற்றும் இந்த கிராமவாசிகளும் சென்று அங்கே ஸ்தாபித்துள்ள சக்ராயுதத்திற்கு அபிஷேக பிரசாத நைவேத்யம் கற்பூரஹாரதிகள் செய்து பிறகு ஆஸ்தானம் நடத்துகின்றனர். நைவேத்யம்செய்த பிரசாதங்களே எல்லோருக்கும் விநியோகம் செய்வார்கள். இந்த தீர்த்தத்தில் எப்போது வேண்டுமானுலும் ஸ்நானம் செய்யலாம்.



## தும்புரு தீர்த்தம்

சுவாமி கோவிலுக்கு வடகிழக்கு பாகத்தில் சுமார் 8 மைல் தூரத்திலுள்ளது. இந்த தீர்த்தத் திற்கு செல்லுபவர்கள் நன்ருய் வழி தெரிந்தவர்களை அழைத்துக் கொண்டு போகவேண்டும். பங்குணி பௌர்னமி யன்று இவ்விடம் தீர்த்த முக்கோடி நடக்கும். அன்றிய தினம் சுமார் ஆயிரம் ஜனங் களுக்கு மேல் சென்று ஸ்நானம் செய்வார்கள். அன்று இந்த க்ஷேத்திர புரோஹிதர்கள் வழியில் தண்ணீர் பந்தல் வைத்து, இந்த தீர்த்த முக்கோ டிக்கு போய் வருகிறவர்களுக்கு பானகம், நீர்மோர் முதலானவைகள் தர்மமாக கொடுப்பார்கள். இந்த தீர்த்தத்திற்கு காலை 5 மணிக்கு திருமலையிலிருந்து புறப்பட்டுச் சென்று ஸ்நானம் செய்துக் கொண்டு சாயந்திரம் 6 மணிக்கு வந்து விடலாம். போகும் வழியில் (இந்த தீர்த்தத்திற்கு சமீபத்தில்) பக்த சிரோன்மனியான தரிகொண்ட வெங்கமாம்பாள் தவம்செய்து முக்திபெற்ற இடமான ஆஸ்ரமம் இப் போதும் பார்க்கலாம். (மிகவும் கண்கவர்ச்சியுள்ள தீர்த்தமிது.)

## இராமகிருஷ்ண தீர்த்தம்

கோவிலுக்கு வடக்கு திசையில் சுமார் 6 மைல் தூரத்திலுள்ள. இவ்விடம் தீர்த்த முக்கோடி தை மாதம் பௌர்னமி யன்று நடக்கும். அன்று சுமார் ஆயிரம் பேர்களுக்கு மேல் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வார்கள். மேற்சொன்ன தினத்தன்று கோவிலிலிருந்து அர்ச்சகர்கள், ஏகாங்கிகள் மற்றும்

கோவிலில் கைங்கர்யம் செய்பவர்களும் ஒன்று கூடி காலை 5 மணிக்குள் கோவில் கைங்கர்யங்கள் முடித்துக் கொண்டு புறப்பட்டு சுமார் 8 மணிக்கெல்லாம் இராமகிருஷ்ண தீர்த்தம் சேருவார்கள். இந்த தீர்த்தத்தினிடம் இயற்கையாய் அமைந்துள்ள ஓர் மலைக் குகையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீகண்ணபிரானுக்கு அபிஷேகம் செய்து பொங்கல் முதலான பிரசாதங்கள் நைவேத்தியம் செய்வித்து ஆஸ்தானம் நடத்துவார்கள். அநேக பக்தர்கள் அவரவர்களிஷ்டப்படி அங்குவந்த ஜனங்களுக்கு சமாராதனை செய்வார்கள். அர்ச்சகர்கள் கூட சுமார் 20 பேருக்கு சமாராதனை செய்விப்பார்கள். இந்த தீர்த்தத்தில் ஓர் அதிசயமுண்டு. அது என்னவென்றால் வெய்யில் நன்றாககாயும் போது சுமார் 12 மணிக்கு அந்த நீர் வீழ்ச்சியில் பார்த்தால் 7 வர்ணங்களில் ஓர் தனுசு காணப்படும். அது பார்ப்பதற்கு மிகவும் அழகாய்யிருக்கும். ஆனால் இந்த தீர்த்தத்திற்கு போவது கொஞ்சம் கஷ்டம்.

## குமாரதாரை தீர்த்தம்

சுவாமி ஆலயத்திற்கு சுமார் 5½ மைல் தூரத்தி லுள்ளது. ஆனால் இந்த தீர்த்தம் போவது கூட கொஞ்சம் கஷ்டம்தான். இந்த தீர்த்த முக்கோடி மாசிமாதம் சுக்லபக்ஷ பௌர்ணமியன்று நடக்கும். அன்று சுமார் ஆயிரம் பேர்வரை இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வார்க்ள். யாத்ரீகர்கள் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதானால் நன்றாய் வழி தெரிந்தவர்களுடன் செல்ல வேண்டும்.

## வைகுண்ட தீர்த்தம்

சுவாமி கோவிலுக்கு கிழக்கு சுமார் 2 மைல் தூரத்திலுள்ளது. ஸ்ரீராமபிரான் ரிஷிமுக பர்வதத்தி லிருந்து இலங்கைக்குப் போகும் சமயத்தில் ஒரு நாள் இவ்விடமிருந்தார். அப்போது சில வானரர் கள் இந்த குகைக்குள் பிரவேசித்தனர். அவ் விடம் வசித்துவந்தவர்களைப்பார்த்து இது இராவணனுடைய மாயை என்று நினைத்து ஸ்ரீராம னிடம் சென்று இந்த பர்வதத்தில் நாங்கள் ஒரு குகையில் பிரவேசித்தோம், அந்த குகையிலுள்ளவர் கள் எல்லோரும் சங்கு, சக்ர கதாதரர்களாய் யிருக் கின்றனர். அவர்கள் இராவணன் மாையயால் எங் களுக்கு இப்படி தெரிகின்றனர் என்று சொன்னார் கள். அதை கேட்டு ஸ்ரீராமர் அந்த குகையில் ஸ்ரீ விஷ்ணு ரமாசமேதமாய் பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்து வருகிறார். விஷ்ணுதேவர் வசித்து வந்த குகையை நீங்கள் பார்த்துவிட்டு வந்த குகையின் முன் பாகத்திலுள்ள தடாகம் வைகுண்ட தீர்த்த மென்று சொன்னார். அந்த வார்த்தைகளைக்கேட்ட வானரர்கள் வைகுண்ட தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து மறுதினம் ஸ்ரீராமருடன் லங்காபுரிக்கு வந்தனர். இந்த தீர்த்சத்தில் யாத்ரீகர்கள் ஸ்நானம் செய்ய எண்ணினல் வழி தெரிந்தவர்களை அழைத்து போக வேண்டும்.

## விருஷபாத்ரி என்பதற்கு காரணம்

விருஷபாசுரன் என்னும் ராக்ஷஸன் சேஷாத்ரி யில் சேர்ந்து தவசிரேஷ்டர்களான ரிஷிகளை பாதித்து வந்தான். இவனுடைய கொடுமைகளைப் பொருக்காமல் முனிவர்கள் பகவானை நினைத்து

பிரார்த்தனர். விஷ்ணு பகவான் அவர்களுக்கு பிரத்யக்ஷமாய் அபயம் கொடுத்து சென்ருர். இந்த விருஷபாசுரன் தும்புரு தீர்த்தத்தில் நரசிம்ம சாலக்கிராமத்தை பூஜித்துக் கொண்டு பூஜை முடிந்ததும் வாளால் தன் சிரசை வெட்டி அந்த சிரசை புஷ்பத்துடன் சேர்த்து அந்த சாலக்கிராமத்திற்கு அர்பித்து வந்தான். இப்படி 200 வருஷங்களாக சாலக்ராமத்தை பூஜித்து வந்தான். இப்படி யிருக்க மஹா விஷ்ணு அவனுக்கு பிரத்யக்ஷம ஞர். விருஷபாசுரன் மஹா விஷ்ணுவைப் பார்த்து எனக்கு வைகுண்டம், சுவர்கலோகம், இந்திராதி பதவிகளொன்றும் வேண்டாம். நான் கோருவது உம்முடன் யுத்தம் செய்ய வேண்டுமென்பதே அந்த வரத்தை எனக்கு கொடுத்தால் போதுமென்ருன். அதற்கு மஹா விஷ்ணு நீ கேட்டப்படியே கொடுத்தேனென்று சொல்லி, விருஷபாசுரனுடன் யுத்தம்புரிய சித்தமானர். விருஷபாசுரனும் யுத்தத்திற்கு ஆயுத்தமானன். இப்படி இருவரும் வீராவேசத்துடன் யுத்தம்புரிந்தனர். மஹாவிஷ்ணு அநேக ரூபங்களெடுத்து போர்புரிந்தார். மஹா விஷ்ணு எந்தெந்த பாணம் யெடுத்து யுத்தம் புரிகிருரோ அதேவிதமாய் விருஷபாசுரனும் அந்தந்த பாணங்களை ஏவி யுத்தம் செய்தான். மஹாவிஷ்ணு இப்படி சில காலம் அவனுடன் யுத்தம் செய்து, பிறகு அவனை சம்ஹரிக்க நினைத்து சக்ராயுதத்தை யேந்தினுர். அதை கண்ட விருஷபாசுரன் மஹாவிஷ்ணுவுக்கு நமஸ்கரித்து இந்த சக்ராயுத பிரபாவத்தை நான் அறிவேன் இதனுல் நான் மடிந்து சுவர்கமடைவேன். ஆனுல் நீங்கள் வசிக்கும் இந்த பர்வதத்திற்கு என் பெயர் நிலைத்

திருக்கும்படி அனுக்ரஹிக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டான். மஹாவிஷ்ணு விருஷபாசுரனை ஆலிங்கனம் செய்துகொண்டு, அவனுக்கு மோக்ஷம் கொடுத்து இந்த பர்வதத்திற்கு "விருஷபாத்ரி" என்று பெயர் வைத்தார். அதனுல் இப்பர்வதம் கிருதயுகத்திலிருந்து விருஷபாத்ரி என்று பெயர் விளங்கியது.

## திரேதாயுகத்தில் அஞ்சனுத்ரி என்பதற்கு காரணம்

கேசரியின் மனைவி அஞ்சனுதேவி சந்ததி இல்லாமல் மதங்க மகரிஷியிடம் சென்று தன் கோரிக்கையைத் தெரிவித்தாள். அந்த ரிஷி அவளுடைய கோரிக்கையைக்கேட்டு அஞ்சனுதேவியைப்பார்த்து பம்பா தீரத்திற்கு அறுபது யோஜனைகள் தூரத்தில் செஷாத்ரி என்னும் புண்ணிய க்ஷேத்திரம் உள்ளது, அவ்விடம் ஆதிவராஹமூர்த்தி வசித்து வருகிருர். அவ்விடம் சென்று சுவாமி புஷ்கரணியில் ஸ்நானம் செய்து அவ்விடத்திற்கு வடக்கு திசையில் ஆகாச தீர்த்தம் என்னும் பவித்ர தீர்த்தம் உள்ளது. நீ அவ்விடம் சென்று பகவானை குறித்து தவம் செய்தால் தவருமல் ஸந்தான முண்டாகுமென்று கூறினர். அவ்வார்த்தைகளைக் கேட்டு அஞ்சனுதேவி ரிஷிக்கு நமஸ்கரித்து கணவருடைய அனுமதியைப் பெற்று சேஷாத்ரி சேர்ந்து புஷ்கரணியில் ஸ்நானம் செய்து ஆகாச தீர்த்தம் சேர்ந்து நிராஹாரமாய் பகவானை நினைத்து தவம் செய்து வந்தாள். இப்படி சிலகாலம் சென்ற பிறகு வாயுதேவன் அவளுக்கு ஓர் மதுர

மான பழத்தைக் கொடுத்து நீ இதை புசித்தால் வாயு சமானமான பலத்துடனும் பக்தசிகாமணி யான ஓர் குமாரன் பிறப்பானென்று சொல்லி புறப் பட்டு சென்ருர். அவள் அந்த பழத்தைபுசித்து வாயு சமான பலமுள்ளவனும், பக்தனுன ஆஞ்ஜநேயனை மகனை பெற்ருள். அக்காரணத்தால் இந்த பர்வத திற்கு திரேதாயுகத்தில் அஞ்சனத்ரி என்று பெயர் உண்டாயிற்று.

## துவாபர யுசத்தில்
## ஆனந்தாத்ரி என்ற பெயர் உண்டாகுதல்

மஹாவிஷ்ணு கிருஷ்ணவதாரத்தை முடித்துக் கொண்டு வைகுண்டத்தில் லக்ஷ்மீ சமேதராய்யிருக்க ஆதிசேஷன் வாயில் காத்துவந்தான். வாயுபகவான் பகவானை தரிசிக்க வேகமாய் வந்தார். ஆதிசேஷன் வாயு பசவானை உள்ளே போகவிடாமல் தன் தங்கக் கழியால் தடுத்தான். வாயுதேவன் சேஷனைப் பார்த்து நான் காரியார்த்தமாய் வைகுடவாசனை பார்க்க வந்தேன் நீ என்னை தடுத்தால் ஜய விஜயர் களுக்கு ஆனகதி உன்க்கு ஏற்படுமென்று சொல்லிக் கொண்டிருந்தார். இப்படி இருவர்கள் ஒருவரோடேருவர் வாக்குவாதம் செய்துக் கொண் டிருந்ததை லக்ஷ்மீதேவி தெரிந்துக் கொண்டு தன் கணவருக்குச் சொன்னுள். உடனே பகவான் துவா ரத்தினிடம் வந்து அந்த கர்வமுடையவனுடன் என்ன வாக்குவாதமென்று வாயுவை கேட்டார். அப்போது ஆதிசேஷன் தன் பலத்தை வாயுபகவா னுக்கு சொல்லிக்கொண்டிருந்தான். பகவான் ஆதி சேஷனைப் பார்த்து வீன் வார்த்தைகளால் என்ன

பிரயோஜனம் நீங்கள் இருவரும் பலாபலங்களை நிரூபிக்க நான் ஒரு மார்க்கம் தெரிவிக்கின்றேன். அப்படி செய்தால் உங்கள் பலாபலங்கள் தெரிய வரும் என்று கூறி, இப்படி சொன்னார். மேருவின் குமாரனான ஆநந்தனென்னும் பர்வதம் மேரு பர்வ தத்திற்கு வடக்கு பாகத்திலுள்ளது நீ அந்த பர்வ தத்தை சுற்றிக்கொள். வாயுபகவான் அந்த பர்வ தத்தை தன் பலத்தால் பெயர்க்க வேண்டும். வாயு அந்த பர்வதத்தை அசைக்கினால் அவனே பலமுள் ளவன் இல்லாவிட்டால் நீயே பலவானவாய்யென்று சொன்னார். இவ்வார்த்தைகளைக்கேட்டு ஆதிசேஷன் மிக வேகமாய்ச் சென்று ஆனந்தன் என்னும் பர்வ தத்தை சுற்றிக்கொண்டான். வாயு அந்த பர்வ தத்தை பெயர்க்க தொடங்கி பலமாக வீசத்தொடங் கினார். ஆனால் பிரயோஜனமில்லாமல் போய்விட்டது வாயு தன் பலத்தை எல்லாம் உபயோகித்து அந்த பர்வதத்தை பெயர்க்க எண்ணினார். அப்போது பதி னன்கு லோகங்கள் நடுநடுங்கியும் ஆதிசேஷன் சுற்றி யுள்ள பர்வதம் மாத்திரம் அசையாமலிருந்தது. இப்படி வாயு வீசும் காற்றால் சப்த லோகங்களும் அல்லகல்லோலமாயிற்று. அப்போது தேவர்கள் வாயு வைப் பார்த்து கோபம் தளிக்கும்படியும், இப்படி கோபித்தால் லோகங்கள் தாங்காது என்று பிரார்த் தித்தார்கள். ஆனால் வாயு இதை லக்ஷியம் செய்ய வில்லை. தேவர்கள் ஆதிசேஷனைப்பார்த்து நீயாவது எங்கள் வார்த்தைகளைக் கேட்டு உலகத்தை நிலை நிறுத்தும்படி பிரார்த்தித்தார்கள். ஆதிசேஷன் தேவர்களுடைய பிரார்த்தனைகளைக்கேட்டு தன் தலை ஒன்றை எடுத்தார். பிறகு வாயுதேவன் ஆனந்த

பர்வதத்தை ஆகாயமார்கத்தில் எடுத்துக் கொண்டு போனூர். அப்போது மேறுபர்வதம் தன் மகனுக்கு நேர்ந்த விபத்தை நிவர்த்திக்கும்படி வாயுவை பிரார்த்திக்க வாயுபகவான் மேறுவினுடைய பிரார்த் தனையைக் கேட்டு அதன் தனயனுன ஆனந்த பர்வ தத்தை சுவர்னமுகி வடக்கு பாகத்தில் வராஹ க்ஷேத்திரத்தில் வைத்தார். அப்போது தேவர்கன் வாயு தேவனைப் பார்த்து, ஆதிசேஷன் விஷ்ணு வுக்கும் அந்தரங்கமானவன், அவனுடன் வீணுக கலகித்துக் கொண்டாய். நீ ஆதிசேஷனை பிரார் தித்து ஆசீர்வாதம் பெற்றுக்கொள் என்ருர்கள். கபடநாடக சூத்ரதாரியான பகவான் தன் காரி யத்தை நிறைவேற்றிக் கொள்ள உங்களிருவருக்கும் கலகம் உன்டாக்கி உங்கள் மூலமாய் தான் நிவசிப்ப தற்காக இந்த பவித்ரமான ஆனந்த பர்வதத்தை இவ்விடத்திற்கு கொண்டு வரச்செய்தார் என்ருர் கள். அவ்வார்த்தைகளைக் கேட்டு வாயுபகவான் ஆதிசேஷனைப் பார்த்து நமஸ்கரித்து பகவான் தங்களை இப்படி பிரேரேபித்து தன் நிவாசத்திற்காக ஆனந்த பர்வதத்தை வரவைத்துக் கொள்வதை தெரியாமல் கலகித்துக் கொண்டோம். என்னை மன்னிக்கவேண்டும். இந்த பர்வதத்தை இது முதல் ஆனந்தாத்ரி என அழைக்க வேண்டுமென்ருா. அவ் வார்த்தைகளைக் கேட்டு ஆதிசேஷன் உண்மையை தெரிந்துக் கொண்டு எப்போதும்போல் இருவரும் சிநேகத்துடன் சந்தோஷத்துடன் புறப்பட்டு சென்ற னர்கள்.

## கலியுகத்தில் வேங்கடாசலம் என்ற பெயர் உண்டாகுதல்

பூர்வம் காளஹஸ்தி என்கிற க்ஷேத்திரத்தில் புரந்தரன் என்கிற உத்தம பிராம்மணர் ஒருவரிருந்தார். அவருக்கு மாதவன் என்கிற குமாரன் பிறந்தான். புரந்தரன் தன் குமாரனுக்கு சகல சாஸ்திர புராணங்களையும் கற்பித்து தகுந்த வயதில் அவனுக்கு விவாகம் செய்வித்து, குல ஜீவனத்தால் காலம் கழித்து வந்தார்கள். சில நாட்களுக்கு பிறகு புரந்தரன் மரணமடைந்தான், மாதவன் தந்தைக்கு செய்யவேண்டிய கருமங்களை சாஸ்திர முறைப்படி செய்து, தன் மனைவியுடன் அன்யோன்யமாய் இருந்து சதா தெய்வ காரியங்களை செய்து வந்தார். ஒரு நாள் அந்த தம்பதிகளிருவரும் விநோசமாய் வனத்திற்கு சேன்றனர். அந்த வனத்தில் நல்ச யௌவனமும், சௌந்தரியமுள்ள ஓர் சண்டாள ஸ்திரீ மாதவன் கண்ணில் பட்டாள். மாதவன் அந்த ஸ்திரீமேல் மோகம் கொண்டு தன் மனைவியைப் பார்த்து நீ வீட்டிற்குச்செல் நான் புஷ்பவனம் சென்று பகவானுக்கு புஷ்பங்கள் கொண்டு வருகிறேன். நீ பூஜைக்கு வேண்டிய காரியங்களை செய்துவையென்று சொல்லி தன் மனைவியை வீட்டிற்கு அனுப்பி விட்டான். பிறகு அந்த சண்டாள ஸ்திரீ வசித்து வந்த வீட்டிற்க்கு சென்றான். அந்த ஸ்திரீ மாதவனுக்கு நமஸ்கரித்து இது சண்டாளர் வீடு தாங்கள் இந்த அபவித்ராமான இடத்திற்கு ஏன் வந்தீர்கள். திரும்பிப்போய் விடுங்களென்று சொன்னாள், இவ்வார்த்தைகளைக் கேட்ட பிராம்மணா சன்டாளத்வம் இந்த

வீட்டிற்கே தவிர உனக்கு சண்டாளத்வம் ஏது? மனம் சம்மதித்தால் சண்டாளத்வம் நீங்கிவிடும். என் மனம் சம்மதிப்பதால் உன் சன்டாளத்வம் போய்விட்டது. நீ என்னை விவாகம் செய்துக் கொண்டு சுகமாகயிறுக்கலாம் என்று கூறி, அவள் சமீபம் சொன்ஞன். அந்த ஸ்திரீ வேண்டாமென்று தடுத்தாலும் அவளை காதலித்து சண்டாளத்வம் பெற்ஞன். இப்படி சில காலம் அந்த ஸ்திரீயுடன் சுகமனுபவித்துக் கொண்டிருக்கும் நாளில் அவள் அகஸ்மாத்தாய் மரணமடைந்தாள். அவள் மரணத்தைக் குறித்து மாதவன் மிகவும் துக்கிற்று அந்த கிராமத்தை விட்டு ஊர் ஊராய் சுற்றி பிச்சை எடுத்துக்கொண்டு காலம் கழித்து வந்தான். சில வட தேசத்தவர்கள் திருப்பதிக்குயாத்திரையாய் வந்துக் கொண்டிருந்தனர். மாதவன் அவர்களுடன் திருப்பதிக்கு வந்துக் கொண்டு, அவர்கள் கொடுத்த மிகுதி சோற்றை புசித்து, அவர்களுடன் திருப்பதி சேர்ந்து கபில தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தான். அந்த சன்டாளன் கபில தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தவுடன் அவனுடைய பாபங்கள் அவன் தேஹத்திலிருந்து அக்னிஜுவாலைகளைப்போல் எறிக்கத் தொடங்கியது. மாதவன் ஸ்நானம்செய்து சேஷாசல பர்வதம் ஏறிக் கொண்டிருக்கும்போது தான் செய்த பாபங்கள் நினைவிற்கு வர தொடங்கிற்று. அவன் தன் பூர்வ சரித்திரத்தை நினைத்துக்கொண்டு தான் சன்டாளத்வம் அடைந்ததற்குமிகவும் விருந்தி தனக்கு நேர்ந்த பாபங்களை நிவர்த்திக்க வேண்டுமென்று பகவானை அநேகவிதங்களால் பிரார்த்தித்துக்கொண்டு, சேஷாத்ரி சேர்ந்து பக்தியுடன்

ஸ்வாமி புஷ்கரணியில் ஸ்நானம் செய்து வெளியே வரும்போது ஸ்ரீனிவாசன் மாதவனுக்கு பிரத்யக்ஷ மாய நீ பாவத்லிருந்து விளகப்பட்டவனாய் விட்டாய், உன்னுடைய சன்டாளத்வம் போய்விட்டது. நீ பாண்டவ வம்சத்தில் சுதர்மனின் குமாரனாய் பிறந்து சோழ இராஜ்யத்தை ஆளும்படி வரம் கொடுத்தார். அந்த வரத்தைப் பெற்று மாதவன் ஸ்ரீனிவாசனுக்கு நமஸ்கரித்து தன் தேஹத்தைவிட்டு சுதர்மனின் குமாரனாய் பிறந்தான.

## சப்த பர்வத நாமங்கள்

வேம்" என்றால் ஸமஸ்த பாமங்கள் என்றும், கட" என்றால் தஹிக்கப்பட்டது என்றும் அர்த்தம்.

சர்வ பாபங்கள் தஹிக்கப்பட்ட புண்ணியக்ஷேத்திர மானதால் கலியுகத்தில் வேங்கடாத்ரி என்ற நாமம் உண்டாயிற்று.

**கிருதயுகத்தில் :** ஆதிசேஷ ரூபத்தில், இருப்பதால் "சேஷாசலம்" என்றார், வேதங்களால் நிறைந்திருப்பதால் "வேதாசலம்" என்றும், கருடனால் பூலோகத்திற்கு கொண்டு வந்தபடியால் "கருடாசலம்" என்றும்,

**திரேதாயுகத்தில் :** அஞ்சனாதேவி தவம் செய்து ஆஞ்ஜநேயனை குமாரனாய் பெற்றதால் 'அஞ்ஜனாத்ரி' என்றும்,

**துவாபரயுகத்தில் :** ஆதிசேஷனையும் வாயுபக வானையும் பிரேரேபித்து ஆனந்த பர்வதத்தை இவ் விடம் கொண்டுவந்தபடியால் " ஆனந்தாத்ரி " என்றும்,

**கலியுகத்தில் :** மஹா சண்டாளத்வ மடைந்த மாதவனுக்கு பகவான் பிரத்யக்ஷமாய் அவனுடைய பாவங்களைப் போக்கியதால் "வேங்கடாசல" மென் றும் பெயர் உண்டாயின.

பக்தர்கள் அவரவர்கள் கோரிக்கைளை இந்த க்ஷேத்திரத்தில் நிறைவேற்றிக் கொண்டதால் இந்த பர்வதத்தை அநேக நாமங்களால் கொண்டாடப் பட்டிருக்கிறது.



ANANDA PRINTERS, TIRUPATI. C. 4,000.